# for that millionaire look

Century
for 100% cotton
textiles

CENTURIZED
PRESHRUNK FABRIC

THE
CENTURY
SPG. & MFG. CO. LTD.,
BOMBAY 25 DD



For Fashion Fabrics choose
*Century Shirtings!*
NPS-CM 16

Century's
Cosy-Cot
cotton SHIRTINGS
with Rich Woollen Feel

# கல்கி

## பொருளடக்கம்

பரிதாபி கார்த்திகை 18 — டிசம்பர் 3, 1972




| சந்தா விவரம் | ஒரு வருடம் | ஆறு மாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 23-00 | ரூ. 11-50 |
| இதர நாடுகள் | ரூ. 50-00 | ரூ. 25-00 |
| இலங்கை(இலங்கைநாணயம்) | ரூ. 27-00 | ரூ. 13-50 |










''கல்கி''யில்வெளி வரும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

# 1,000 த்துக்கும் அதிகமான பரிசுகள்

ஒரு லட்சம் ரூபாய் பெறுமானம்

முதல் பரிசு:
அம்பாஸடர்
மார்க் II கார்
அல்லது
ரூ. 25,000
ரொக்கம்

ஹார்லிக்ஸ் மகிழ்ச்சிகரமான குடும்பப் போட்டி






உங்கள் ஹார்லிக்ஸ்
விற்பனையாளர்களிடம்
நுழைவு நமூனக்கள் கிடைக்கும்

## முழுமையான ஊட்டம்பெற ஹார்லிக்ஸ்

'ஹார்லிக்ஸ்' ஒரு பதிவு பெற்ற ட்ரேட் மார்க்.

போட்டி முடிவு தேதி 31 டிசம்பர், 1972

MHM-3083 Tam.3

கல்கி

மலர் 32
இதழ் 18



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா
— பாரதியார்

# ஆந்திர மக்களின் ஆவேசம்

மொழிவாரி மாகாணப் பிரிவினை தொடங்கியபோதே ராஜாஜி, இது பழைய காட்டுக் குடிகளின் வாழ்முறையாகும் என்று எச்சரித்தார். அதாவது பல சமுதாயத்தார் ஒன்றுகூடி வாழும் நாகரிக வாழ்முறைக்கு இது விரோதமாகும் என்றார். இன்று ஒரே மொழியைப் பேசுபவர்களிலேயே ஒவ்வொரு பகுதியினரும் தனியுரிமைகள் கோருவதைப் பார்க்கும்போது அவரது தீர்க்கதரிசனம் தெள்ளெனப் புலனாகிறது.

ஆந்திரப் பிரதேசத்தில் நடைபெற்றுக் கொண்டிருக்கும் கிளர்ச்சியும், அதன் விளைவாக ரயில் நிலையங்களைக் கைப்பற்றுவதும் ரயில்களை ஓடவிடாமல் செய்வதும், பெட்ரோல் ஊற்றி ஊழியர்களைத் தீயிட்டுப் பொசுக்குவதும் பயங்கரமான நடவடிக்கைகள்.

கிளர்ச்சிகள் உணர்ச்சிகளைத் தூண்டிவிடலாமே ஒழிய, எந்தப் பிரச்னையையும் அமைதியாக அலசி, விவாதித்து, முடிவுக்கு வர உபயோகப்படாது. இந்த உண்மையை ஆந்திர, தெலிங்கானா மக்கள் இன்னமும் உணராமலிருப்பது வருந்தத் தக்கது.

கிளர்ச்சிக்குக் காரணம் நிஜாம் காலத்தில் பிறப்பிக்கப்பட்ட 'முல்கி' விதிகள். நிஜாமின் ஆளுகைக்குட்பட்டிருந்த இப்போதைய தெலிங்கானா பகுதியில், அரசாங்க அலுவலகங்களிலும், அதன் தொடர்புள்ள ஸ்தாபனங்களிலும் வேலை வாய்ப்புக்கள், பதினைந்து ஆண்டு அந்தப் பிராந்தியத்தில் வசித்தவர்களுக்கே உரியன என்று அவ்விதிகள் வரையறை செய்துள்ளன. ஆந்திர மக்கள் தெலிங்கானாப் பகுதியைச் சேர்த்துக்கொண்டு 'விசால–ஆந்திர' ராஜ்யத்தை உருவாக்கினர். அப்போது இருந்த உணர்ச்சி வேகத்தில் முல்கி விதிகளைப் பற்றி எவரும் கவலை கொள்ளாமல் பின்தங்கிய பகுதியான தெலிங்கானாப் பகுதியின் முன்னேற்றத்துக்குப் பல விதங்களில் ஒத்துழைக்கவும் ஒப்புக்கொண்டனர்.

மற்றப் பிரதேசங்களைப் போலவே, ஆந்திரப் பிரதேசத்திலும் எல்லா மக்களுக்கும் வேலை வாய்ப்புக்களில் சம உரிமை உள்ளதென்று கருதப்பட்டது. இதை எதிர்த்துத் தெலிங்கானாவில் முல்கி விதிகள் அமுல் செய்யப்பட வேண்டும் என்று சிலர் நீதிமன்றத்துக்குப் போயினர். உயர் நீதிமன்றம் தெலிங்கானா-ஆந்திர தேச இணைப்புச் சட்டத்தில் முல்கி விதிகளைப் பற்றி ஒன்றும் கூறப்படாமையால் அவை நடைமுறையில் செல்லும் என்று தீர்ப்புக் கூறியது.

இதை அமல் நடத்த முற்பட்டால் தெலிங்கானாப் பகுதியில் வேலை பார்க்கும் ஆந்திர மக்களுக்குப் பாதகம் ஏற்படுவதுடன், கல்லூரிப் படிப்பு போன்ற வகைகளில் கூடத் தாரதம்மியமும் வேற்றுமையும் தோன்றக் காரணமாகின்றன. எனவே இவ்விதிகளை ரத்து செய்துவிட வேண்டும் என்று மற்ற ஆந்திரப் பகுதி மக்கள் கிளர்ச்சி செய்கின்றனர். தெலிங்கானாப் பகுதி மக்களோ முல்கி விதிகள் தங்கள் முன்னேற்றத்தைக் கருதி அமலில் இருக்க வேண்டும் என்று கிளர்ச்சி நடத்துகின்றனர்.

அரசியலார்களும், அமைச்சர்களும் பிரச்னை மிகச் சிக்கலானது என்பதற்காக அதைப் பரிசீலிப்பதைத் தள்ளிப் போட்டுக்கொண்டே போனால் நிலைமை மேலும் மேலும் மோசமாகுமே தவிர, பரிகாரம் கிடைக்காது. ஏற்கனவே உருப்படியான எந்த முடிவும் எடுக்காமல் காலம் கடத்தப்பட்டதே இப்போதைய நிலைமைக்கு ஒரு காரணம் எனலாம். மேலும் தாமதமின்றி, இப்பிரச்னைக்குத் தீர்வு காணப்பட வேண்டும். எடுக்கப்படும் முடிவு நாட்டின் ஒற்றுமைக்கும் தேச நலனுக்கும் உதவுவதாக இருக்க வேண்டும். தெலிங்கானாத் தலைவர்களும் ஆந்திரத் தலைவர்களும் விவேகத்துடனும் பிரத்யட்ச நோக்குடனும் முல்கி பிரச்னைக்கு மங்கள முடிவு காண்பார்களாக!

# விவிதபாரதி விஸ்தரிப்பு

இதோ தொடர் நாடகம் தயார்!
ஐந்தாவது ஐந்தாண்டு திட்டம்
மெல்லிசை நிகழ்ச்சி....
ஜின் ஜின்னக்கடி ஜின் ஜின்னா...
ஏழைமையை ஒழிப்போம்....
ஜின் ஜின்னக்கடி ஜின் ஜின்னா....
தார்
இந்திரா

ஐந்தாவது திட்டத்தில் இருபது புதிய விவிதபாரதி நிலையங்கள் உருவாகும். -செய்தி

வெற்றி கொள்ளுவோம்!
தி.மு.க. அரசு
எப்படி தமாஷ்!
லஞ்ச ஊழலை எதிர்த்துத் தமிழன் எழுச்சி

பாளையங்கோட்டை சப் இன்ஸ்பெக்டர் சஸ்பெண்டு செய்யப்பட்டார். -செய்தி

# ராஜாஜியின் கருத்துக்கள்

தமிழ் நாட்டு அரசியல் தலைவர்கள் என்ன செய்ய உத்தேசித்திருக்கிறார்கள் என்று தெரியவில்லை. அவர்கள் எந்த முடிவுக்கும் வரக் காணோம். தமிழக விஷயமாக என்ன செய்ய வேண்டும் என்பது குறித்துப் பிரதம மந்திரியும் எந்த முடிவுக்கும் வரவில்லை. நான் ஏன் கருத்துத் தெரிவிக்கவில்லை என்பதை இந்தச் சூழ்நிலையில் மக்கள் புரிந்து கொள்ள முடியும். நிலவரம் தெளிவாகும் வரையில் நான் அபிப்பிராயம் சொல்லாமல் காத்திருக்க வேண்டும்.

★

சட்டசபைக் கூட்டத் தொடரைக் கலைப்பதற்குத் தமக்குப் பூரண அதிகாரம் உண்டு என்று தமிழக கவர்னர் உரிமை பாராட்டியிருக்கிறார். மந்திரி சபையின் ஆலோசனைப்படிதான் கவர்னர் செயலாற்றுகிறார். எனவே மேற்சொன்ன வாதத்தின்படி, பதவியிலுள்ள மந்திரி சபை தன் இஷ்டப்படி எப்போது வேண்டுமானாலும் சட்ட சபைக் கூட்டத்தைக் கலைக்கலாம் என்றாகிறது. இப்படி உரிமை பாராட்டுவது பெருத்த எதிர் விளைவுகளை உட்கிடையாகக் கொண்டதாகும். தற்போது வழக்கு கோர்ட்டில் இருப்பதால் இதற்கு அதிகமாக நான் விமரிசிப்பதற்கில்லை.

★

தமிழ்நாட்டுச் சட்டசபை நாயகர் திரு மதியழகன் என்னை அக்டோபர் 23ந் தேதியன்று வந்து பார்த்தார். என்னுடன் சில நிமிஷங்கள் இருந்தார். என் ஆசியைக் கோரினார். நானும் ஆசீர்வாதம் செய்தேன். குறிப்பாக வேறு எவ்விஷயமும் விவாதிக்கப்படவில்லை. நிலைமை திட்டவட்டமாக ஓர் உருவம் எடுக்கிற வரையில் எந்த விஷயத்தையும் நாம் ஆலோசிப்பதில் பயன் இராது என்று அவரிடம் கூறினேன். திரு மதியழகன் என்னைச் சந்தித்தது பற்றி விசேஷ அர்த்தம் ஏதும் செய்துகொள்ள வேண்டியதில்லை என்று மக்களுக்கு உணர்த்தும்முகமாகவே இதனை எழுதுகிறேன்.

★

நவம்பர் 23, 24 தேதிகளில் வெளியாகியுள்ள செய்தியின்படி ஆந்திரப் பிரதேச ரயில் நிலையங்களில் வன்முறை வலுத்துக் காட்டுமிராண்டித்தனம் எல்லை கடந்திருக்கிறது. இந்த அநாகரிகத்தைத் தடுக்கக் கடும் நடவடிக்கையை இனியும் தள்ளிப் போடுவதற்கில்லை. செய்திகளைப் படிக்கும்போது ஆந்திரப் பிரதேசத்தில் நாகரிக வாழ்வே சமாப்தியாகி விட்டதோ என்று தோன்றுகிறது. இந்தச் சூழ்நிலையிலும் மத்திய சர்க்கார் மெத்தனமாக இருந்தால் அது தன் தலையாய கடமையைச் செய்யக் கையாலாகாததாகி விட்டது என்றே ஆகும்.

# தமிழ் நாட்டிலே...

தீரன்

## பேராசிரியரும் போலீஸும்

சமீபத்தில் திருநெல்வேலிக்கு அருகில் பாளையங்கோட்டை புனித சேவியர் கல்லூரி இரசாயனப் பேராசிரியர் திரு ஏ. சீனிவாசன், போலீசாரால் துன்புறுத்தப்பட்ட நிகழ்ச்சியும் அதையொட்டித் தமிழ்நாடு முழுமையும் மாணவர் சமூகமும், ஆசிரியர் சமூகமும் கொதித்து எழுந்ததும் இங்குள்ள அரசுக்கு ஒரு பாடமாக அமையக் கூடியவை. அதிகார துஷ்பிரயோகத்துக்கு இதைவிடப் பெரிய உதாரணம் வேறெதுவும் இருக்க முடியாது.

19–11–72 மாலையில் பேராசிரியரும் அவருடைய சகோதரர்களும் பாளையங்கோட்டை கோபால்சாமி கோயில் தெற்கு மாட வீதியில் தங்கள் வீட்டு முகப்பில் நின்று 'தற்காலத்து இளைஞர்கள் அலங்கோலமாக உடை அணிவது பற்றி விவாதித்'துப் பேசிக் கொண்டிருந்தார்கள். அப்போது அதே பாதையாகப் பாளையங்கோட்டை போலீஸ் அதிகாரி ஒருவரின் புதல்வர்கள் இருவர் நடந்து வந்திருக்கின்றனர். 'டைட் பேண்ட்ஸ்' அணிந்திருந்த அவர்கள் பேராசிரியரும் அவர் சகோதரர்களும் தங்களைப் பற்றித்தான் பேசிக்கொண்டிருக்கிறார்களோ என்று அருகே போய் விசாரித்த போது, "உங்களைப் பார்த்தோ, உங்களைப் பற்றியோ நாங்கள் பேசிக் கொள்ளவில்லை. பொதுவாக நாட்டு நிலைமை பற்றி நாங்கள் பேசிக் கொண்டிருந்தோம். அந்த வேளையில் நீங்களும் இந்த வழியாக வந்திருக்கிறீர்கள்" என்று பேராசிரியர் அதற்கு மறுமொழியும் சொல்லி அனுப்பி விட்டார்.

ஆனால் போலீஸ் அதிகாரியின் புதல்வர்கள் பேராசிரியர் கூறிய பதிலால் சமாதானம் அடையவில்லை. உடனே போலீஸ் ஸ்டேஷனுக்குப் போய் அங்கிருந்து மப்டி உடையில் அரை டஜன் போலீஸ்காரர்களை உடன் அழைத்து வந்து பேராசிரியரின் வீட்டுக்குள் புகுந்து, பேராசிரியரையும் அவரது இரு சகோதரர்களையும் பலவந்தமாக இழுத்துத் தள்ளித் தாக்கியிருக்கிறார்கள். அப்புறம் பேராசிரியரையும் அவருடைய சகோதரர்களையும் போலீஸ் ஸ்டேஷனுக்கு அழைத்துச் சென்று அங்கும் அடித்த பின் அப்படி அடி வாங்கிய அவர்கள் மேலேயே பொய்க் குற்றம் பதிவு செய்யவும் முயன்றதாகத் தெரிகிறது.

பேராசிரியரும் அவருடைய சகோதரர்களும் பாளையங்கோட்டை மருத்துவக் கல்லூரி ஆஸ்பத்திரியில் சிகிச்சைக்காக அனுமதிக்கப்பட்ட பின் இந்தச் செய்தி பரவி, நகர் முழுவதும் உள்ள மாணவர்கள் போலீஸாரின் அத்துமீறலை எதிர்த்துக் கொதித்

தெழுந்து விட்டனர்' குறிப்பிட்ட போலீஸ் ஸ்டேஷன் முன் மாணவர்கள் மிகப் பெரிய ஆர்ப்பாட்டம் நடத்திய பின், ''அத்துமீறிய போலீஸார் மீது உடன் நடவடிக்கை எடுக்கப்படும்'' என்று கலெக்டர் உறுதிமொழி கூறியிருக்கிறார். மாணவர்கள் கலைந்து சென்றிருக்கிறார்கள். அடுத்து கலெக்டர் அலுவலகம் முன்பு மாணவர்கள் ஆர்ப்பாட்டம் நடத்திய போது போலீஸார் தடியடிப் பிரயோகம் செய்து துரத்தவே நூர்துநாதன் என்ற மாணவர் பாலத்திலிருந்து தாமிரவர்ணி ஆற்றில் விழுந்து மரண மடைந்ததனால் நிலைமை மேலும் மோசமாகி விட்டது.

அறிவின் பிரதிநிதியாகிய ஒரு பேராசிரியரை வீடு புகுந்து தாக்கும் அளவுக்கு நாடு சீரழிந்த நிலையில் இருக்கிறது. இப்படித் தாக்கப்படும் அளவு அந்தப் பேராசிரியர் செய்த பிழைதான் என்ன? படித்த பேராசிரியர் ஒருவருக்கே இந்த நிலை என்றால் பாமரர்கள் இந்த நிலைக்கு ஆளானால் எவ்வளவு கொடுமைப்படுத்தப் படுவார்களோ!



## மேயர் தேர்தல்

அண்மையில் நடந்து முடிந்த சென்னை மாநகராட்சி மேயர் தேர்தலில் தி. மு. க.வும் அதன் ஆதரவுக் கட்சிகளும் சேர்ந்து ஓட்டளித்தால் எவ்வளவு வோட்டுகள் கிடைக்குமோ அதையும்விட அதிகமான வோட்டுக்களைப் பெற்று வந்திருக்கிறார் தி.மு.க. மேயர். தி. மு. க.வைத் தீவிரமாக எதிர்க்கும் கட்சிகளிலிருந்தே சிலர் தி. மு. க.வுக்கு இரகசியமாக வோட்டுப் போட்டிருந்தால் அன்றி இப்படி நடந்திருப்பது சாத்தியமில்லை. கார்ப்பொரேஷன் சம்பந்தமான பல கீழ்மட்ட லஞ்சங்கள் தவிர அதன் உறுப்பினர்களே இப்படி இரகசியமாக மோசம் போகிறவர்களாக இருப்பது அநாகரிகமானது. கட்சிகளில் இருப்போர் தங்கள் கட்சிக் கட்டுப்பாட்டை மீறி எதிர்த் தரப்பு வேட்பாளருக்கு வோட்டுப் போடுகிற அளவு முறைகேடானவர்களாக இருந்தால் இவர்களையும், இவர்கள் நிற்கிற கட்சியின் சின்னத்தையும் நம்பி வோட்டுப் போடும் ஆயிரக் கணக்கான மக்களின் கதி என்ன ஆவது? மாற்றுக் கட்சிக் கவுன்ஸிலர்கள் கத்திரிக்காய், வாழைக்காய் போல் கார்ப்பொரேஷன் தேர்தல் சந்தையில் விலை போவது ரொம்பவும் விநோதமானதாயுள்ளது. அதைவிட விநோதமானது, ''அதிகப்படி வோட்டுக்கள் நல்லவர்கள் போட்ட வோட்டுக்கள்'' என முதல்வர் வர்ணித்திருப்பது.

## சாலைகளில் படுகுழிகள்

சென்னை நகரில் தியாகராயநகர், புரசவாக்கம் பகுதிகளில் சாலைகளிலும், மக்கள் நடமாடும் பகுதிகளிலும் இரும்பு வட்டமிட்டு மூடப்பட்டிருந்த பாதாளச் சாக்கடைகளின் மேற்புற அடைப்பான்கள் திருடப்பட்டிருக்கின்றன.

இதனால் பள்ளி செல்லும் குழந்தைகள், பாதை வழியாக நடந்து போவோர், வருவோர் இக்குழிகளில் விழவும், தடுமாறவும் நேரிடுகிறது. குழந்தைகள், சிறுவர்கள் விழுந்தாலோ உள்ளே போய்க் கதறினாலும் வெளியில் கேட்காது. பழைய இரும்பு விலைக்கு விற்பதற்காகச் சமூக விரோதிகளும், விஷமிகளும் இந்த 'மேன்ஹோல்' மூடிகளைத் திருடி எடுத்துச் செல்வதாகத் தெரிகிறது. இந்த அபாயம் உடனே தடுத்து நிறுத்தப்படாவிடில் பல விபத்துக்கள், உயிர்ச் சேதங்கள் ஏற்படும். பொது உபயோகத்தில் இருக்கும் மின்சார விளக்குகள், சாக்கடை மூடிகள், இவற்றைத் திருடுகிறவர்களும், கடத்திச் செல்கிறவர்களும் மிகவும் கடுமையாகத் தண்டிக்கப்பட வேண்டியவர்கள்.

## வாக்காளர் பேரணி

'கருணாநிதியின் தலைமையிலான தி.மு.க. அரசு பதவி விலக வேண்டும் என்று வற்புறுத்தும் விதமாக எம். ஜி. ஆர். தலைமையிலான அ. தி. மு. க.வினர் நவம்பர் 26ந் தேதி புதுமையான போராட்டம் ஒன்று நடத்தினார்கள்.

'வாக்காளர் பேரணி' என்ற பெயருடன் கூடிய இத்திட்டத்தின்படி ஒவ்வோர் ஊரிலும் தி. மு. க. சட்டமன்ற உறுப்பினரின் வீட்டுக்கு ஊர்வலமாகச் சென்று தங்கள் அதிருப்தியையும் நம்பிக்கையின்மையையும் தெரிவிக்கும் மனுக்களை வாக்காளர்கள் அந்த எம்.எல். ஏ.க்களிடம் தரவேண்டும். ஊர்வலத்தை அந்தந்த எம். எல். ஏ.க்களின் வீடுகளுக்கு நூறு கஜ தூரத்துக்கு முன்பே நிறுத்திவிட்டு நான்கு அல்லது ஐந்து தலைவர்கள் மட்டும் மனுவை எடுத்துச் சென்று கொடுக்க வேண்டும் என்றும், எம். எல். ஏ. அதை வாங்க மறுத்தால் அல்லது வீட்டில் இல்லாதிருந்தால் கதவில் ஒட்டிவிட்டு வரவேண்டும் என்றும் தீர்மானமாகியுள்ளது.

'1971ல் நடந்த பொதுத் தேர்தலில் பல கட்சிகளின் ஆதரவோடு கூட்டணியில் நின்று வெற்றி பெற்ற நீங்கள் கடந்த ஒன்றரை





"டேய், மட சாம்பிராணி! உன் 'ப்ராக்ரஸ் ரிப்போர்ட்' பார்த்தியா?"
"பார்த்தேன்! படித்தேன்!! ரசித்தேன்!!!"

ஆண்டு காலத்துக்குள் மக்கள் ஆதரவையும், கூட்டணிக் கட்சிகளின் ஆதரவையும் இழந்திருப்பதோடு, லஞ்ச ஊழல் குற்றங்களுக்கு ஆளாகியிருக்கும் ஒரு தலைமையின் கீழ் சட்ட மன்ற உறுப்பினரா யிருக்கிறீர்கள். நீங்கள் பதவி விலக வேண்டும்' என்ற கோரிக்கை அந்த மனுவில் இருக்கிறது. அமைதியாகவும், சாத்விகமான முறையிலும் இந்த வாக்காளர் பேரணி நடக்க வேண்டும் என்று எம். ஜி. ஆர். வேண்டியுள்ளார்.

## இரசிக்கவும் முடியுமா?

அ. தி. மு. க. தலைவர் எம். ஜி. ஆர். குடியரசுத் தலைவரிடம் கொடுத்த தமிழ் நாடு அரசு பற்றிய புகார்கள் குடியரசுத் தலைவரிடமிருந்து பிரதமருக்கு அனுப்பப்பட்டுப் பிரதமரிடமிருந்து விளக்கம் கோரித் தமிழ் நாடு அரசாங்கத்துக்கு அனுப்பப்பட்டு விட்டது என்று தெரிகிறது. ஆனால் 'புகார்ப் பட்டியலை நீங்கள் பார்த்தாயிற்றா?' என்று தம்மிடம் கேட்ட நிருபர்களுக்கு முதல்வர் கூறியிருக்கும் பதில்தான் அடக்கமாக இல்லை. முதல்வரின் வழக்கமான அகம்பாவமே அந்தப் பதிலில் தொனிக்கிறது.

"பார்த்தேன். படித்தேன். இரசித்தேன். அதில் புதுமை எதுவும் இல்லை" என்று தமக்குப் பிரதமர் அனுப்பிய புகார்ப் பட்டியல் பற்றி முதல்வர் நிருபர்களிடம் சிரித்துக் கொண்டே சொல்லி யிருக்கிறார். புகார்ப் பட்டியல்களைப் படிக்கவும், சிந்திக்கவும், தக்க படி மறுமொழி எழுதவும்தான் ஒரு முதல்வரால் முடியும் என்று நாம் நினைத்தோம். ஆனால் முதல்வரோ அவற்றை இரசித்ததாகவும் கூறுகிறார். புகார்களைப் படித்து இரசிக்கவும் முடியும் என்பதே இப்போதுதான் முதல் முதலாக நமக்குத் தெரிகிறது. புகார்களைக் களையவும், கண்டிக்கவும், தவிர்க்கவும் முயல்வதை விட இரசிக்க முயலும் ஒரு முதல்வரை நாம் பெற்றிருப்பதை எப்படிப்பட்ட பாக்கியம் என்று வருணிப்பது? இப்படிப் புகார்களை இரசிக்கும் முதல்வரை என்னென்பது?

## வாத்தியாரின் வேலை அல்ல]

சிவகாசி எஸ். எச். என். வி. உயர்நிலைப் பள்ளியிலிருந்து ஒரு சுவாரஸ்யமான செய்தி கிடைத்திருக்கிறது. அப்பள்ளியின் தமிழாசிரியர் ஒருவர் தம்மிடம் படிக்கும் மாணவர்களுக்கு அவர்கள் பெற்றோர்கள் சூட்டிய பெயர்களைத் தனித் தமிழில் மாற்றி வைத்துக் கொள்ளச் சொல்லி வற்புறுத்தி வகுப்புக்களில் பிரசாரம் செய்ததாகவும், பெற்றோரே சூட்டிய தெய்வப் பெயர்களைக் கிண்டல் செய்ததாகவும் அறிந்து பள்ளி நிர்வாகம் அந்த ஆசிரியர் மேல் நடவடிக்கை எடுத்து வேலையிலிருந்து நீக்கிவிட்டது. ஆனால் இப்படிப்பட்ட தெய்வ நிந்தனை செய்யும் தி. மு. க. ஆதரவு ஆசிரியர்களை எப்போதுமே உடன் காப்பாற்ற முன்வருகிற கல்வி இலாகா, "அவர்மேல் நீங்கள் எடுத்த நடவடிக்கை கடுமையானது. அதை மறு பரிசீலனை செய்யவும்" என்று பள்ளி நிர்வாகத்தைக் கேட்டுக் கொண்டது. நிர்வாகம் அதற்கு மறுத்தவுடன் அந்தப் பள்ளிக்கூடத்துக்கு அரசாங்கக் 'கிராண்ட்' நிறுத்தப்பட்டது. 1972 அக்டோபரில் இது நடந்தது. 'பள்ளியில் வேலை பார்க்கும் 61 ஆசிரியர்களையும் 9 ஊழியர்களையும் பாதிக்கும் என்பதனால் அரசாங்கம் மானியத்தை நிறுத்தக் கூடாது' என்று பள்ளி நிர்வாகம் போட்ட வழக்கின் பேரில் நீதிபதி கல்வி இலாகா டைரக்டரின் உத்தரவுக்கு இப்போது இடைக்காலத் தடை விதித்துள்ளார். மாணவர்கள் பெயரைத் தனித் தமிழில் வைத்துக் கொள்ளாததால் எதிர் காலத்தில் இன்னும் எத்தனை பள்ளிகள் தி. மு. க. ஆட்சியில் மானியம் இழக்கப் போகின்றனவோ?

## கோவில் நில விற்பனை

சமீபத்தில் சேலத்தில் கூடியுள்ள இந்து தேவாலய பாதுகாப்புக் குழு தமிழ் நாடு அரசின் சில பெரும் பிழைகளைச் சுட்டிக்காட்டியிருக்கிறது. முக்கியமாக அறவே தெய்வ நம்பிக்கை இல்லாதவர்கள் கோவில் தர்ம கர்த்தாக்களாக நியமிக்கப் படுவதையும் கோவில் நிலங்களை விற்பது, ஏலம் விடுவது, குத்தகை விடுவது போன்ற விளம்பரங்கள், ஒரு குறிப்பிட்ட தி. மு. க. தினசரியில் மட்டுமே செய்யப்படுவதையும் கண்டித்து இக் குழுவினர் தீர்மானங்கள் நிறைவேற்றியுள்ளனர். சென்னை மயிலாப்பூர் கபாலீசுவரர் கோவிலுக்குச் சொந்தமான 25 லட்சம் மதிப்புள்ள 116 மனைகளை மூன்றரை லட்சம் ரூபாய்க்கு விற்றுவிடவும், கங்காதரீசுவரர் கோவிலுக்குச் சொந்தமான 26 லட்சம் ரூபாய் மதிப்புள்ள 147 மனைகளை நாலரை லட்ச ரூபாய்க்கு விற்கவும் முடிவு செய்தவர்களை வன்மையாகக் கண்டித்தும், அவர்களை இராஜிநாமாச் செய்யக் கோரியும் இக் குழு வேண்டுகோள் விடுத்திருக்கிறது. 'கோவில் நிலங்களை நஷ்ட விலைக்கு விற்க இவர்கள் யார்?' என்று இக் குழுவினர் கண்டிப்பது நியாயமே ஆகும்.

ஜீவனே பிரம்மம் என்பது அகங்காரமா? இல்லவே இல்லை; அதன் நேர் எதிர்நிலையே!

# ஸ்வாமி நாமா? இல்லை என்றால்...?



ஜகத்குரு ஸ்ரீகாஞ்சிகாமகோடி சங்கராசாரிய சுவாமிகள்

ஜீவனும் பிரம்மமும் ஒன்றுதான் என்கிறார் ஸ்ரீ ஆதிசங்கர பகவத்பாதர்கள். அதாவது நாமேதான் ஸ்வாமி என்கிறார். ''நான்தான் ஸ்வாமி'' என்றுதான் ஹிரண்யகசிபுவும் சொன்னான். அவனை ஸ்வாமியே நரசிம்மமாக வந்து சம்ஹாரம் செய்யும்படி ஆயிற்று. ஆசாரியாள், ''நாம்தான் ஸ்வாமி'' என்று சொல்வது ஹிரண்யகசிபு சொன்னது போலவா?

இல்லவே இல்லை. ''நான்தான் ஸ்வாமி'' என்று ஹிரண்யகசிபு சொன்னபோது தன்னைத் தவிர வேறு ஸ்வாமியே கிடையாது என்ற அகங்காரத்தில் சொன்னான். பகவத்பாதர்களோ ஸ்வாமியைத் தவிர வேறு எதுவுமே கிடையாது என்பதால் நாம்தான் ஸ்வாமி என்றார். ஜீவனுக்கு உள்ள அகங்காரத்தை அடியோடு விட்டுவிட்டால் இவனே பிரம்மத்தில் கலந்து பிரம்மமாக இருக்கிறான் என்றார். இப்போது நாம் உத்தரணி ஜலத்தைப் போல் கொஞ்சம் சக்தியுடன் இருக்கிறோம். ஸ்வாமி அகண்ட சக்தியுடன் சமுத்திரமாக இருக்கிறார். அந்தச் சமுத்திரத்திலிருந்துதான் இந்த உத்தரணி ஜலம் வந்தது. இந்த உத்தரணி ஜலம், தான் தனி என்கிற அகங்காரத்தைக் கரைத்து, சமுத்திரத்தில் கலந்து சமுத்திரமே ஆகிவிட வேண்டும்.

நாம் ஸ்வாமியாக இல்லாவிட்டால், ஸ்வாமியைத் தவிர வேறான ஒன்றாக இருக்க வேண்டும். அவ்வாறெனில் பரமாத்மாவுக்கு வேறான வஸ்துக்களும் உண்டு என்றாகிவிடும். அதாவது பல வஸ்துக்களில் பரமாத்மாவும் ஒன்று என்றாகிவிடும். அவருடைய சம்பந்தமில்லாமல் வேறு வஸ்துக்கள் உண்டாகி இருக்கின்றன என்றாகும். இப்படி இருப்பின் அவர் பரமாத்மா, ஸ்வாமி என்பதே பொருந்தாதே! எல்லாமாக ஆன ஒரே சக்தியாக இருக்கிற மட்டும்தானே அவர் ஸ்வாமி? எல்லாம் அவர் என்னும்போது நாம் மட்டும் வேறாக இருக்க முடியுமா? எனவே 'ஸ்வாமியே நாம்' என்று வெளிப் பார்வைக்கு அகங்காரமாகப் பேசுகிற அத்வைதிகள், ஸ்வாமியின் மகிமையைக் குறைக்கவில்லை. மாறாக, 'ஜீவன் ஸ்வாமி அல்ல; இவன் அல்பன், அவர் மகா பெரிய வஸ்து; இவன் வேறு, அவர் வேறு'' என்று வெளிப் பார்வைக்கு அடக்கமாகச் சொல்கிறவர்கள்தான் அவரைப் பல சாமான்களில் ஒன்றாக்கி மகிமையைக் குறைத்து விடுகிறார்கள். அவரே சகலமும் என்றால் நாமும் அவராகத்தான் இருந்தாக வேண்டும்.

சமுத்திரமாக இருக்கிற அவரேதான் ஆற்று ஜலம், குளத்து ஜலம், கிணற்று ஜலம், அண்டா ஜலம், செம்பு ஜலம், உத்தரணி ஜலம் போல் தம் சக்தியைச் சிறு சிறு ரூபங்களாகச் செய்து கொண்டு பலவித ஜீவஜந்துக்களாகியிருக்கிறார். இதில் மனிதனாகும்போது பாப புண்ணியத்தை அநுபவிக்கவும், பாப புண்ணியம் கடந்த நிலையில் தாமே ஆகிவிடவும் விதி செய்திருக்கிறார். மனிதனாகும்போது மனசு என்ற ஒன்றைக் கொடுத்து அதைப் பாப புண்ணியங்களில் ஈடுபடுத்திப் பலனை அநுபவிக்கச் செய்கிறார். மனசு ஆடிக் கொண்டிருக்கிற இந்த நிலையில் இருக்கிற நாம் எடுத்த எடுப்பில் பாப புண்ணியமற்ற நிலையைக் கிரகித்து, அவரே நாம் என்று உணர முடியாது. ஆகவே அவரே நாமாக இருந்தாலும், அதை நாம் அநுபவத்தில் உணருவதற்கு அவரது அருளைப் பிரார்த்திக்க வேண்டியவர்களாகவே இருக்கிறோம். அவர் மகா பெரிய ஸ்வாமி, நாம் அல்ப ஜீவன் — அவர் மகா சமுத்திரம், நாம் உத்தரணி ஜலம் என்கிற எண்ணத்தோடு ஆரம்பத்தில் பக்தி செய்து வருவோம். ஸ்வாமி கொடுத்துள்ள மனசால் அவரையே பற்றிக் கொள்ள வேண்டும். மனசை அவர் குரங்காகப் படைத்திருக்கிறார். அந்தக் குரங்கு இப்போது தேகத்தைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டிருக்கிறது. ஆனால் ஸ்வாமி இந்தத் தேகத்தை நசிப்பதாக அல்லவா வைத்திருக்கிறார்? இந்த அழுகல் பழத்தை மனக் குரங்கு விட்டுவிட வேண்டும். அழுகாத பழம் கிடைத்தால் அழுகல் பழத்தைக் குரங்கு போட்டுவிடும். அழுகாத, மதுரமான பழம் பரமாத்மாதான். அதை மனத்தால் பிடித்துக் கொண்டு சரீரப் பிரக்ஞையை விட்டுவிட அப்பியசிக்க வேண்டும். சரீரப் பிரக்ஞை, அகங்காரம் அடியோடு போய்விட்டால் அவர் பரமாத்மா, நாம் ஜீவாத்மா என்கிற பேதமே போய் அவரே நாமாக, அத்வைதமாக ஆகிவிடுவோம். 'நீ வேறெனாதிருக்க, நான் வேறெனாதிருக்க'— என்று அருணகிரி பாடிய அநுபவத்தை அடைவோம்.

# அலை ஓசை

அமரர் கல்கி

## 17. யமுனை தடுத்தது!

சீதாவை ஏற்றிக்கொண்ட மோட்டார் புது டில்லியிலிருந்து ஷாஜஹான் புரத்தை நோக்கி அதிவிரைவாகச் சென்றது. வெள்ளி வீதி வழியாகப் போய், ஜும்மா மசூதியைத் தாண்டி, செங்கோட்டையை வலப் புறத்தில் விட்டு, ரயில்வே தண்டவாளத்தைக் கடந்து அப்பால் சென்று, யமுனைப் பாலத்தை நெருங்கிற்று.

முதலில் சிறிது நேரம் சீதா திக்பிரமை கொண்டிருந்தாள். பின்னர், சூரியாவின் எச்சரிக்கை நினைவு வந்தது. தன்னைப் பின்தொடர்ந்து சூரியா வருகிறான் என்ற எண்ணத்தினால் சற்றுத் தைரியமாயிருந்தாள். எப்படியும் சூரியாவின் கார் இந்தக் காரைப் பிடித்துவிடும் என்று நம்பியிருந்தாள். ஆனால் யமுனைப் பாலத்தைக் கார் நெருங்கியதும் அவளுடைய மனத்தில் 'திக்' என்றது. அது மிகவும் குறுகலான பாலம். வண்டிகள் ஒரு வரிசைதான் அதில் போகலாம். இரண்டு பக்கங்களிலிருந்தும் வரும் வண்டிகள் ஒரே சமயத்தில் அந்தப் பாலத்தில் போக முடியாது. பாலத்தின் இரு முனைகளிலும் போலீஸ்காரர்கள் நிற்பார்கள். ஒரு பக்கத்துக் கார்களை விடும்போது மற்றொரு முனையில் உள்ள போலீஸ்காரர்கள் அங்கு வரும் கார்களையெல்லாம் தடுத்து நிறுத்தி வைப்பார்கள். பிறகு இந்த முனையிலிருந்து கார்களை விடும்போது அந்த முனையிலிருந்து வரும் வண்டிகளை நிறுத்தி வைப்பார்கள். இது சீதாவுக்கு நினைவு வந்தது. தான் ஏறியுள்ள வண்டியைப் பாலத்தில் போக விட்டுவிட்டு, பின்னால் வருகிற சூரியாவின் காரை நிறுத்திவிட்டால் என்ன செய்கிறது என்று துணுக்கம் அடைந்தாள். சூரியாவின் வண்டியோ பின்னால் இரண்டு பர்லாங்கு தூரத்தில் வந்து கொண்டிருந்தது.

சீதா பயந்த வண்ணமே ஆயிற்று. அவள் ஏறியிருந்த வண்டி பாலத்தில் சென்றதும், பின்னால் வருகிற வண்டிகள் நிற்க வேண்டும் என்று போலீஸ்காரர் கையைக் காட்டிவிட்டார். சீதாவின் வண்டி பாலத்தைக் கடந்தவுடனே அந்த முனையில் காத்திருந்த வண்டிகள் பாலத்தில் விடப்படுவதைச் சீதா கவனித்தாள். உடனே ஒரு பெரும் பீதி சீதாவைப் பற்றிக் கொண்டது. அவளுடைய வயிற்றிலிருந்து குடல் மேலே கிளம்பி மார்பை அடைத்தது போலவும், மார்பிலிருந்து நெஞ்சு கிளம்பித் தொண்டையை அடைத்தது போலவும் இருந்தது. தலைக்குள்ளே வெடிகுண்டு வெடித்து நாலாபுறமும் சிதறிச் சென்றது போலத் தோன்றியது. தன்னையறியாத ஆக்ரோஷத்துடன் 'வீல்' என்று ஒரு நீர்க்கமான கூச்சல் போட்டுக் கொண்டு சீதா ஓடுகிற காரிலிருந்து வெளியே குதிக்க முயன்றாள். பக்கத்திலிருந்த மனிதன் அவளுடைய முகத்தைப் பார்த்து ஓங்கி ஓர் அறை கொடுத்தான். உடனே சீதாவின் கூச்சல் நின்றது; காரிலிருந்து குதிக்கும் முயற்சியும் நின்றது. வண்டிக்குள் நிச்சப்தம் குடிகொண்டது. எதிர்ப்புறமாகப் போய்க் கொண்டிருந்த வண்டிகளிலிருந்து சிலர் இந்த வண்டியிலிருந்து ஏதோ கூச்சல் வந்ததைக் கவனித்துக் காரை உற்றுப் பார்த்தார்கள். ஆனால் அவர்கள் ஒன்றும் கண்டு பிடிக்க முடியவில்லை. கண்டு பிடிக்க முடியாதபடி சீதாவை ஏற்றிக் கொண்டிருந்த மோட்டார் வண்டி அதிவேகமாகச் சென்றது.

அந்த முரட்டு மனிதன் முகத்தில் கொடுத்த அறை சீதாவுக்குத் தன் சுயபுத்தியைத் திருப்பிக் கொடுத்தது. ஒரு நொடியில் அவள் மனம் அமைதி அடைந்தது. தன்னுடைய நிலைமையைப் பற்றிச் சீதா நிதானமாக யோசிக்கத் தொடங்கினாள்.

சாயங்காலம் சூரியா தனக்கு எச்சரிக்கை செய்தபோது தான் அலட்சிய

மாய்ப் பேசியதை ஞாபகப்படுத்திக் கொண்டாள். இப்போது உண்மையிலேயே தனக்கு ஆபத்து வந்துவிட்டது. யார் தன்னைக் கொண்டு போகிறார்கள்? எதற்காகக் கொண்டு போகிறார்கள்? வட இந்தியாவில் அவ்வப்போது நடந்த நர கோரங்களைப் பற்றியும் பெண் விற்பனையைப் பற்றியும் அவள் கேள்விப்பட்டிருந்த வரலாறுகள் அலையலையாக நினைவுக்கு வந்தன. எங்கேயாவது கொண்டு போய்த் தன்னை விற்றுவிடுவார்களோ என்று எண்ணியபோது அவளுடைய தேகம் உச்சந் தலையிலிருந்து உள்ளங்கால் வரையில் நடுங்கியது.

அல்லது ஒரு வேளை யாராவது ஒரு தூர்த்தனை மகாராஜா அல்லது நவாபின் அந்தப்புரத்தில் கொண்டு போய்த் தன்னைச் சேர்த்து விடுவார்களோ? இந்தமாதிரி சம்பவங்களைப் பற்றியும் அவள் கேட்டிருந்தாள்; கதைகளிலும் பத்திரிகைகளிலும் படித்திருந்தாள். தன் விஷயத்தில் அப்படியெல்லாம் நடக்கக் கூடுமென்று எதிர்பார்க்கவில்லை. ஆனால் இப்போது....?

ஒரு விஷயம் நிச்சயம். வெறும் கூச்சல் போடுவதினாலோ பலாத்காரத்தினாலோ இந்த யமகிங்கரர்களிடமிருந்து தப்பித்துச் செல்லமுடியாது.



தான் படித்திருந்த நாவல்களில் இம்மாதிரியான அபாயத்துக்குள்ளான பெண்கள் என்னென்னவிதமான தந்திரங்களைக் கையாண்டு தப்பினார்கள் என்று யோசித்துப் பார்த்தாள். ஞாபகத்துக்கு வந்தது ஒன்றும் தன் விஷயத்தில் காரியத்துக்கு உதவும் என்று தோன்றவில்லை. தெய்வாதீனமான உதவிகளும் சந்தர்ப்பங்களும் கிடைத்ததினாலேயே அவர்கள் தப்பியிருக்கிறார்கள். தனக்கோ, வந்த உதவியையும் தெய்வம் குறுக்கே நின்று தடுத்துவிட்டது! ஆகா! யமுனா நதியே! கண்ணன் விளையாடிய புண்ணிய யமுனாநதியே! உனக்கு நான் என்ன அபசாரம் செய்தேன்? ஏன் என் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொண்டாய்? நல்ல சமயத்தில் சூரியாவைத் தடுத்து நிறுத்திவிட்டாயே? எத்தகைய பயங்கரமான படுகுழியில் விழப் போகிறேனோ தெரியவில்லையே?

ஆனால் அதற்குள்ளாக ஏன் நிராசை அடைய வேண்டும்? சூரியா எப்படியும் தொடர்ந்து வராமல் இருந்துவிடுவானா? கால் மணி தாமதமாயிருக்கும். அவ்வளவுதானே? அதற்காகத் தன்னைப் பின்தொடர்வதை விட்டுவிடுவானா? ஒரு நாளும் மாட்டான். வந்து கொண்டுதான் இருப்பான்.

ஆகையால் இந்தக் காரை எங்கேயாவது தாமதப்படுத்தினால் நல்லது. அது ஒன்றுதான் வழி. எப்படிக் காரைத் தாமதப்படுத்துவது? ஆம்; எங்கேயாவது ஊர் கண்ட இடத்தில் 'தாகமாயிருக்கிறது' என்று சொல்லலாம். அப்புறம் 'பசிக்கிறது' என்று சொல்லலாம். எப்படியாவது கெஞ்சிக் கூத்தாடி நிறுத்தச் சொல்லலாம். அதற்கு இந்த மனிதர்களோடு நல்லதனமாகப் பேசி முன்னாடியே சிநேகம் செய்து கொள்ள வேண்டும்.

இப்படிச் சீதா தீர்மானித்து எப்படிப் பேசத் தொடங்கலாம் என்று யோசித்துக்கொண்டிருந்தபோது, அந்த மனிதனே பேசினான். ''மகளே! நீ கூச்சல் போடாமலும் தொந்தரவு கொடுக்காமலும் இருந்தால் உனக்கு ஒரு கஷ்டமும் ஏற்படாது. நன்மைதான் ஏற்படும். உன்னை அடிக்க வேண்டி நேர்ந்ததற்காக ரொம்பவும் வருத்தப்படுகிறேன்!'' என்றான்.

அந்த மனிதன் நடுப் பிராயத்தைக் கடந்த முதிய மனிதன் என்பதைச் சீதா கவனித்திருந்தாள். அவனுடைய குரலும் பேச்சின் பாணியும் உண்மையாகவே அவன் அன்புடனும் அனுதாபத்துடனும் பேசுகிறான் என்று தெரியப்படுத்தின.

ஆகையால் சீதா மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு, '' நீங்கள் யார்? என்னை எங்கே அழைத்துக் கொண்டு போகிறீர்கள்?'' என்று கேட்டாள்.

'' அப்படிக் கேள், சொல்கிறேன்! உன்னை உன் மாதாஜியிடம் அழைத்துப் போகிறோம்'' என்று அந்த மனிதன் சொன்னான்.

சீதாவுக்குக் குபீர் என்று சிரிப்பு பீறிக் கொண்டு வந்தது. அவளுடைய மாதாஜி இறந்து எத்தனையோ வருஷங்கள் ஆயிற்று. அகண்ட காவேரிக் கரையில் அன்னையின் உடம்பு எரிந்து சாம்பலாகி எவ்வளவோ காலம் ஆயிற்று. அதற்குப் பிறகு சென்ற காலம் ஒரு யுகம் போலத் தோன்றியது. இப்போது இந்த வடக்கத்தியான், 'உன்னை உன் தாயாரிடம் அழைத்துப் போகிறேன்' என்கிறான். இது என்ன பைத்தியக்காரத்தனம்?

ஒரு வேளை கனவு காண்கிறோமோ? அல்லது தனக்கு மரணமே சம்பவித்து விட்டதா! மரணத்துக்குப் பிறகு நடப்பதா இது?

இவர்கள்தான் யம தூதர்களா? உண்மையிலேயே மறு உலகத்தில் உள்ள தன் தாயாரிடம் தன்னை அழைத்துச் செல்கிறார்களா...?

அப்படி இருக்க முடியாது, மறு உலகப் பிரயாணம் மோட்டாரில் நடைபெறும் என்று கேட்டதே இல்லையே? இந்த மனிதர்களும் ஆவி வடிவத்தினராகத் தோன்றவில்லையே?

சந்தேகத்தைத் தீர்த்துக் கொள்ளச் சீதா தன்னைத் தானே கிள்ளிப் பார்த்துக் கொண்டாள். கிள்ளிய இடத்தில் வலித்தது. தான் உயிரோடும் உடலோடும் இருப்பது நிச்சயம்.

பின்னர், இந்த மனிதன் இப்படிச் சொல்லுவதின் அர்த்தம் என்ன?

அவன் சொன்னதைத் தான் சரியாகப் புரிந்துகொள்ளவில்லையோ என்ற சந்தேகம் சீதாவுக்கு உதித்தது. ''என்னை எங்கே அழைத்துப் போகிறீர்கள்?'' என்று அந்த மனிதனைப் பார்த்து மறுபடியும் கேட்டாள்.

''அதுதான் சொன்னேனே? உன் தாயாரிடம் அழைத்துப் போகிறோம். உன் சகோதரரும் உன்னைப் பார்க்க ஆவலாயிருக்கிறார்!'' என்று அம்மனிதன் சொன்னான்.

சீதாவின் திகைப்பு அதிகமாயிற்று. சகோதரன்! தன்னுடைய சகோதரன்! சீதாவுக்கு முன்னால் பிறந்த ஆண் குழந்தையைப் பற்றி அவளுடைய தாயார் சில சமயம் கூறியதுண்டு. ஆனால் பிறந்து மூன்று மாதங்களுக்குள் அந்தக் குழந்தை செத்துப் போயிற்று. அதைக் குறித்து அடிக்கடி அவளுடைய தாயார் புலம்புவாள். ''அவன் முகத்திலே பால் வடிந்தது. ராஜ களை சொட்டியது. சிரித்தால் ரோஜா மொட்டு மலருவதைப் போல இருக்கும். அவன் உயிரோடிருந்தால் எனக்கு ஒரு கவலையும் இல்லை. உன் தகப்பனார் இந்த மாதிரி இருப்பதைப் பற்றிக் கவலைப்படவே மாட்டேன். எனக்கும் உனக்கும் கொடுத்து வைக்கவில்லை!'' என்று ராஜம்மாள் அடிக்கடி புலம்பி



யது சீதாவுக்கு ஞாபகம் வந்தது. ஆனால் அந்தக் குழந்தை தான் பிறப்பதற்கு இரண்டு வருஷங்கள் முன்பே செத்துப் போயிற்று. வேறு சகோதரன் தனக்குக் கிடையாது. ஆகா! உண்மையிலேயே ஒரு சகோதரன் மட்டும் தனக்கு இருந்திருந்தால்....? இத்தகைய கஷ்டங்கள் எல்லாம் நேர்ந்திருக்குமா?

இந்த மனிதன் தன்னைப் பார்க்க யாரோ சகோதரன் காத்துக் கொண்டிருப்பதாக உளறுகிறான்! எதற்காக இம்மாதிரி பொய் இவன் சொல்ல வேண்டும்.....?

சீதாவின் எண்ணப் போக்கில் திடீரென்று ஒரு தடை ஏற்பட்டது. ஏதோ ஒரு நிழல்போன்ற எண்ணம் — ஆச்சரியமான சந்தேகம் — சாத்தியமென்று நம்புவதற்கு முடியாத அபிலாஷை— தோன்றியது. ஆனால் ஏன் உண்மையாயிருக்க முடியாது? இந்த மனிதன் எதற்காக இப்படிப்பட்ட பொய்யைக் கற்பனை செய்து சொல்ல வேண்டும்? தன்னுடைய பிறப்பைக் குறித்து ஏதோ ஒரு மர்மம் இருக்க வேண்டும் என்று சில சமயம் தான் பகற் கனவு கண்டது உண்மையாயிருக்குமோ? — "கல்யாணத்தை நிறுத்திவிடவும்" என்று தன் தகப்பனார் தந்தி அடித்ததின் காரணத்தை அவர் சொல்லவே இல்லை. அதைப் பற்றித் தனக்கு ஏற்பட்ட சந்தேகங்களில் ஏதேனும் உண்மை இருக்குமோ? சீச்சி! என்ன அசட்டுத்தனம்! ஓயாமல் கற்பனைக் கதைகளும் மர்மம் நிறைந்த நாவல்களும் படித்ததின் பலனே இந்தப் பிரமையெல்லாம் என்று பல தடவை அவற்றை ஒதுக்கித் தள்ளியிருக்கிறேனே? மறுபடியும் அந்தப் பிரமைகளுக்கு ஏன் இடம் கொடுக்க வேண்டும்?

ஆனால் இப்போது தன் வாழ்க்கையில் நடக்கும் சம்பவம் கற்பனைக் கதைகளையெல்லாம் மிஞ்சியதாயிருக்கிறதே! துப்பறியும் நாவல்களில் வரும் மர்மத்தைக் காட்டிலும் பெரிய மர்மமாயிருக்கிறதே! உண்மையில் இந்த மனிதர்கள் யார்? எதற்காகத் தன்னைக் கொண்டு போகிறார்கள்? போகுமிடத்தில் என்னுடைய கதி என்ன ஆகப் போகிறது.....!

கொஞ்ச தூரத்தில் தீப வரிசைகள் தெரிந்தன. ஏதோ ஒரு பட்டணத்தை நெருங்குகிறோம் என்பதற்கு அறிகுறியான சந்தடி கேட்டதுடன் மேலும் மேலும் அதிகமாகிக் கொண்டு வந்தது.

ஒரு வேளை சூரியா பின்தொடர்ந்து வருவதாயிருந்தால் அவனுக்கு இந்தக் காரைப் பிடிக்க அவகாசம் ஏற்படுவதற்கு யுக்தி செய்ய வேண்டும் என்ற எண்ணம் மறுபடியும் சீதாவின் மனத்தில் உதித்தது.

"எனக்கு வயிற்றைப் பசிக்கிறது. தாகம் எடுக்கிறது, சாப்பிடுவதற்காவது குடிப்பதற்காவது ஏதாவது கிடைக்குமா?" என்று சீதா கேட்டாள். காரைத் தாமதப்படுத்த வேண்டும் என்றுதான்.

"ஆகட்டும்; பார்க்கலாம்" என்றான் அந்த மனிதன். சீதாவுடன் இதுவரையில் ஹிந்தியில் பேசி வந்தவன் காரில் முன் பகுதியில் இருந்தவர்களிடம் வேறொரு பாஷையில் ஏதோ பேசினான். அந்த பாஷை பஞ்சாபியாகவோ அல்லது மார்வாரியாகவோ இருக்க வேண்டும். சீதாவுக்கு நன்றாகத் தெரியவில்லை.

ஏதோ ஒரு பட்டணத்தின் குறுகலான வீதிகளின் வழியாகக் கார் சென்றது. கடைத் தெருவில் ஒரு ஹோட்டலுக்கு எதிரில் நின்றது. அந்த ஹோட்டல் வாசலில் பூரிகள், லட்டுகள் மற்றும் தித்திப்புப் பண்டங்கள் விற்பதற்கு வைத்திருந்தன. அந்தப் பண்டங்களின் மீது ஆயிரங்கோடி ஈக்கள் மொய்த்துக் கொண்டிருந்தன. அடுப்பில் சட்டுவத்தில் கொதித்துக் கொண்டிருந்த பழைய நெய்யின் மணம் சாக்கடை நாற்றத்தோடு கலந்து வந்து மூக்கைத் தாக்கியது.

வாய் அகன்ற பெரியதொரு பித்தளைச் சட்டுவத்தில் கெட்டியான பால் காய்ந்து கொண்டிருந்தது.

காரிலிருந்து ஒருவன் இறங்கி அந்தக் கடையண்டை போனான்.

சீதாவுக்கு ஒரு கணம் அங்கே கூச்சல் போட்டு ரகளை செய்யலாமா என்று தோன்றியது. உடனே அந்த எண்ணத்தை மாற்றிக் கொண்டாள். தெருவிலே போய்க் கொண்டிருந்த மனிதர்களைப் பார்த்ததும், 'இங்கே கூச்சல் போடுவது ஓர் ஆபத்திலிருந்து இன்னொரு ஆபத்தில் தாண்டிக் குதிப்பதாகும்' என்று அவளுக்குத் தோன்றியது. அது மட்டுந்தானா காரணம்? அவளுடைய உள்ளத்தின் அந்தரங்கத்தில், "இந்தப் பிரயாணத்தின் முடிவு தான் என்ன?" என்று தெரிந்து கொள்ளும் ஆவல் குடிகொண்டிருந்ததும் ஒரு காரணமாயிருக்கலாம். மனித உள்ளத்தின் விசித்திரங்களைப் பூரணமாகக் கண்டறிந்தவர்கள் யார்?

இறங்கிய மனிதன் பூரியும் மிட்டாயும் பொட்டணம் கட்டி எடுத்துக் கொண்டு, ஒரு பெரிய மண் சட்டியில்

# அன்னத்தின் மென்னழகு மின்னிடும் உங்கள் முகத்தில்...

...மென்துகிலாய் பொலியும் போலிமி புடவைகள், ஜார்ஜெட்டுகள், நைலான்கள் - சாதாரண மற்றும் பிரிண்டுகள் - போலிமி புடவைகள் — பெண்மைக்களிக்கும் சீர் வரிசைகள். மதிமயக்கும் உடுப்புத் துணிகள் - ஆண்களுக்கும் பெண்களுக்கும் போலிமியின் கைவரிசை.



**தி பாம்பே ஸில்க் மில்ஸ் லிட்.,**
இண்டஸ்ட்ரியல் எஸ்டேட், லால்பாக், பம்பாய்-12.

SKYLARK

மெஸர்ஸ் G. I. மிர்பூரி, 137, பீமசேன கார்டன் ரோடு, மயிலாப்பூர், சென்னை-4
மெஸர்ஸ் ரமண்லால் D. ஷா, மெஜட்டி பிரஹ்லாத ராவ் பில்டிங், இரண்டாவது மாடி 11-25, 15, கொத்தபேட், விஜயவாடா-1.
மெஸர்ஸ் KN. பரமசிவன், 108, தெற்கு ஆவணி மூல வீதி, மதுரை-1
மெஸர்ஸ் யுனிவர்ஸல் டிரேடிங் கார்ப்பொரேஷன், தேவஸ்தா மார்க்கெட், சிக்பெட், பெங்களூர்-2A
ஸர்வோதயா கார்ப்பொரேஷன், 12, கைலாஸ் மார்க்கெட், செகந்திராபாத்-3

கொதிக்கின்ற பாலும் வாங்கிக்கொண்டு காரில் வந்து ஏறினான்.

வண்டியைத் தாமதப்படுத்தலாம் என்கிற சீதாவின் நோக்கம் அவ்வளவாக நிறைவேறவில்லை. ஏனெனில், ஐந்து நிமிஷங்களுக்குமேல் அந்த இடத்தில் வண்டி நிற்கவில்லை.

அந்தப் பட்டணத்தைக் கடந்து கொஞ்ச தூரம் போனதும் மறுபடியும் சாலையின் இருபுறமும் ஒரே பொட்டைத் திடலாகக் காட்சியளித்தது. குட்டை குட்டையான கருவேல மரங்களையும் குத்துக் குத்தான பூஞ்செடிகளையும் தவிர வேறு காணப்படவில்லை.

கொஞ்ச தூரம் அந்தச் சாலையில் சென்ற பிறகு கார் மறுபடியும் நின்றது. சீதாவைப் பார்த்து அந்த மனிதன், ''பூரியும் மிட்டாயும் சாப்பிடுகிறாயா?'' என்று கேட்டான்.

பூரி — மிட்டாயின் பேரில் மொய்த்திருந்த ஈக்களின் ஞாபகம் வரவே சீதா, ''வேண்டாம்!'' என்றாள்.

''பசிக்கிறது என்று சொன்னாயே?'' என்று அந்த மனிதன் கேட்டான்.

''பூரி மிட்டாய் பிடிக்காது, அரிசிச் சாதம்தான் எனக்குப் பிடிக்கும்'' என்று சொன்னாள் சீதா.

''ஆகா! இந்தப் பெண்ணின் பேச்சைப் பார்! அரிசிச் சாதம் வேண்டுமாம்!'' என்று சொல்லி அந்த மனிதன் சிரித்தான்.

பிறகு, ''கொஞ்சம் பாலாவது சாப்பிடு!'' என்றான்.

அதையும் வேண்டாம் என்று சொல்வது சந்தேகத்துக்கு இடமாகும் என்று சீதா எண்ணி, ''சரி, சாப்பிடுகிறேன்'' என்றாள்.

மண் சட்டியிலிருந்து டம்ளரில் பாலை ஊற்றிச் சீதாவிடம் கொடுத்தார்கள். பால் கமகமவென்று ஏலக்காய், குங்குமப்பூ மணம் வீசிக் கொண்டிருந்தது. சாப்பிடுவதற்கு மிகவும் ருசியாகவும் இருந்தது.

சீதா பால் சாப்பிட்டவுடன் கார் மறுபடியும் கிளம்பிற்று. சிறிது நேரத்துக்கெல்லாம் சீதாவுக்குக் கண்களைச் சுழற்றிக் கொண்டு தூக்கம் வந்தது. இது தூக்கம்தானா? அல்லது மயக்கமா? ஒரு வேளை பாலில் எதையாவது கலந்து கொடுத்திருப்பார்களா? உடம்பு சுரமாய்க் கிடந்தபோது ஒவ்வொரு நாள் மருந்து சாப்பிட்ட பிறகு இப்படித் தான் மயக்கமும் தூக்கமும் கலந்து வந்தன என்பது சீதாவுக்கு ஞாபகம் வந்தது. ''ஐயோ! மயக்க மருந்து

அட்டைப்படக் கவிதை

## பேசாத பேச்சு!

தூக்கி வைத்த பிள்ளை இடம்
 தொடுவானம் தேடினரோ?
ஆக்கி வைத்த சொல்லை இன்பம்
 அவன் முகமாய்க் கூடினரோ?

ஆசை எல்லாம் அன்னவனும்
 ஆனந்தம் உண்டனரோ?
பேசரிய பேச்சவனே
 பிள்ளை என்று கண்டனரோ?

இளமுறுவல் மன்னவன் பால்
 எதிரொலிக்கப் பார்த்தனரோ?
வளமுறுவல் தாரகையே
 வந்(து)அவன்பால் கோத்தனரோ?

நாளை இவன் தலைவனென்றே
 நல்லகனு விரித்தனரோ?
பாளை இவன் சிரிப்பினுக்கே
 பரிசெதிராய்ச் சிரித்தனரோ?

— தமிழழகன்



எதற்காகக் கொடுத்தார்கள்? தன்னைக் கொன்று விடுவார்களோ? கொன்று அந்த வனாந்தரத்தில் எறிந்துவிடுவார்களோ? ஐயோ! இந்தக் கதிக்கா ஆளாகப் போகிறேன்? என் அருமைக் கண்மணியைப் பார்க்காமல் போகிறேனே? ஆகா! அவருக்கு நன்றாய் வேண்டும்! நான் கொலையுண்டு செத்துப் போனதை அறிந்து அவர் சந்தோஷப்படட்டும்!

ஒரு கணம் கூச்சல் போடலாமா என்று சீதா நினைத்தாள். ஆனால் கூச்சல் போட முடியவில்லை. கண்ணைச் சுற்றியது; தலை சுற்றியது; உடம்பு சோர்ந்தது.

சாலையில் மறுபடியும் வண்டி நின்றது போலத் தோன்றியது. எதிரில் வந்த ஒரு வண்டி பக்கத்தில் நின்றது. ஏதோ தெரியாத பாஷையில் பேசிக் கொண்டார்கள். கிணற்றுக்குள்ளிருந்து பேசுவது போலக் கேட்டது. புதிதாக வந்த காரிலிருந்து ஒரு மூதாட்டி இறங்கி வந்து சீதா இருந்த வண்டியில் அவள் பக்கத்தில் ஏறிக் கொண்டதுபோலிருந்தது. அப்புறம் சீதா அடியோடு நினைவை இழந்து நித்திரையில் ஆழ்ந்தாள்.

## 18. மண்டை உடைந்தது!

**வை**ஸ்ராயின் நிர்வாக சபை அங்கத்தினர் கொடுத்த ஜாஜ்வல்யமான இரவு விருந்து முடிவடைந்து, விருந்தாளிகள் அவரவர்களுடைய கார் கிடைத்துப் புறப்படுவதற்கு அரை மணி நேரம் ஆயிற்று. வழக்கம் போல் ராகவனுடைய காரில் மாஜி திவானும் அவருடைய புத்திரிகளும் ஏறிக் கொண்டார்கள். வண்டி போய்க் கொண்டிருந்தபோது தாமாவும் பாமாவும் விருந்தில் பார்த்தவைகளையும் கேட்டவைகளையும் பற்றிச் சளசளவென்று பேசிக் கொண்டிருந்தார்கள். ஆனால் வழக்கம்போல் ராகவன் அந்தப் பேச்சுக்களில் கலந்து கொள்ளாமல் மௌனமாயிருந்தான். மாஜி திவானுடைய பங்களா வாசலில் வண்டி நின்றதும் அவரும் அவருடைய புதல்விகளும் காரிலிருந்து இறங்கினார்கள். ராகவன் இறங்கவில்லை.

''மிஸ்டர் ராகவன்! நீங்கள் வரவில்லையா? ஓர் ஆட்டம் போடலாமே?'' என்று தாமா கேட்டாள்.

'' இல்லை ; இன்றைக்கு வீட்டுக்குச் சீக்கிரமாகப் போக வேண்டும் '' என்றான் ராகவன்.

அப்போது பாமா தாமாவிடம் ஏதோ இரகசியமாகச் சொல்ல இருவரும் கலகலவென்று சிரித்தார்கள்.

ராகவன் வண்டியிலிருந்து இறங்கிப் பங்களா முகப்பு வரையில் அவர்களுடன் சென்று, அங்கே நின்றான்.

''நீங்கள் எதற்காகச் சிரித்தீர்கள் என்று எனக்குத் தெரியும்'' என்றான்.

''பின்னே, தெரியாமல் இருக்குமா? விருந்தில் தாரிணியைப் பார்த்துப் பேசியதில் மதி மயங்கிப் போயிருக்கிறீர்கள் என்று சொன்னேன். அது உண்மைதானே?'' என்று சொல்லித் தாமா மறுபடியும் சிரித்தாள்.

''அதில் ஒரு பாதிதான் உண்மை. தாரிணியைப் புரட்சிக்காரி என்று நீங்கள் சொல்லிக் கொண்டிருந்தீர்களே? அது எவ்வளவு பெரிய தவறு என்று தெரிந்து கொண்டீர்களா?'' என்று ராகவன் கேட்டான்.

''மிஸ்டர் ராகவன்! அது எப்படித் தவறு என்று சொல்கிறீர்கள்?''

''புரட்சிக்காரியாயிருந்தால் இன்றைய விருந்துக்கு வந்திருக்க முடியுமா? விருந்து கொடுத்த நிர்வாக சபை அங்கத்தினரும் அவருடைய மனைவியும் தாரிணியிடம் எவ்வளவு சிநேகமாக நடந்து கொண்டார்கள், பார்க்கவில்லையா? இன்னும் என்ன அத்தாட்சி வேண்டும்?''

'' ஓ! ராகவன்! சில காரியங்களில் நீங்கள் இன்னும் பச்சைக் குழந்தையாக இருக்கிறீர்கள்! தாரிணி புரட்சிக்காரியாயிருந்தால் அவள் இன்றைய விருந்துக்கு வந்திருக்க முடியாதா? அது அவள் எவ்வளவு சாமர்த்தியசாலி என்பதைக் காட்டுகிறது!''

''நம்முடைய சி.ஐ.டி. போலீஸார் எவ்வளவு சாமர்த்தியசாலிகள் என்பதையும் காட்டுகிறது!'' என்றான் ராகவன்.

''அதுவும் உண்மை. சி.ஐ.டி. போலீஸார் வேண்டுமென்றுதான் அவளை விட்டு வைத்திருக்கிறார்கள். டில்லியில் புரட்சிக் கூட்டம் தங்கும் இரகசிய இடம் ஒன்று இருக்கிறது. அதைக் கண்டுபிடிப்பதற்காக அவளைப் பிடிக்காமல் சும்மா விட்டு வைத்திருக்கிறார்கள்!'' என்றாள் தாமா.

'' அப்படியா? நம்ப முடியாத விஷயமாயிருக்கிறதே!''

'' நீங்கள் நம்ப முடியாத விஷயங்கள் இன்னும் எத்தனையோ இருக்கின்றன.

# இந்த விழாக் காலத்தில் பிலிப்ஸ் வழங்கும் விசேஷ அன்பளிப்பு!

# இலவசம்



ஒவ்வொரு பிலிப்ஸ் ஸ்டீரியோ ஸிஸ்டத்துடனும் ரூ.130 மதிப்புள்ள **4** பாலிடோர் எல்பி ரெகார்டுகள்.



பிலிப்ஸ் மற்றும் பாலிடோர் வழங்கிடும் இந்த விசேஷ திட்டத்தின்படி, நீங்கள் எந்த பிலிப்ஸ் வியாபாரியிடமிருந்தும் பிலிப்ஸ் ஸ்டீரியோ ஸிஸ்டம் வாங்கி, பாலிடோரின் எந்த டீலரிடமிருந்தும் உங்களுக்குப் பிடித்தமான 4 ரெகார்டுகளை இலவசமாகப் பெறலாம். ரெகார்டுகளை இலவசமாகப் பெற, பிலிப்ஸ் ஸ்டீரியோ ஸிஸ்டம் வாங்கும்போது, வியாபாரியிடமிருந்து கூப்பன் வாங்க மறக்காதீர்கள். இசைப்பிரியரான உங்களுக்கு இன்னிசையை முழுக்க முழுக்க அனுபவிக்க இது ஒரு பொன்னான தருணம். எனவே, பிலிப்ஸ் ஸ்டீரியோ ஸிஸ்டத்தில் சங்கீதத்தின் முழு இனிமையையும் கேட்டானந்தியுங்கள். ஏனெனில் இது பரவசமூட்டும் விழாக் காலம்!

**உலகத் தரம் வாய்ந்த பிலிப்ஸ் ஸ்டீரியோ ஸிஸ்டம்**




உள்ளூர் வரிகள் தனி

OBM 9905 TM

**பிலிப்ஸ்**




பிலிப்ஸ் இந்தியா லிமிடெட்

# நியூட்ரின் வண்ணம் தீட்டும் போட்டி!

**444 முத்திரைப் பரிசுகள் பெறலாம்!**

**போட்டி முடிவு தேதி**
டிசம்பர் 31, 1972



உங்கள் டீலரிடமிருந்து போட்டித்தாளை இன்றே வாங்குங்கள்!

NCH-39A/72 TAM

வயதுக்கேற்ப,
மூன்று குழுக்கள்:
'ஏ' 8 வயதுக்குள்
'பி' 8லிருந்து 10 வயதுக்குள்
'ஸி' 11லிருந்து 14 வயதுக்குள்

முதற் பரிசுகள்-3
ஒவ்வொன்றுக்கும் ரூ. 501/- ரொக்கம் + கைக்கடிகாரம் + பாக்கெட் டிரான்ஸிஸ்டர்
இரண்டாம் பரிசுகள்-9
கைக்கடிகாரங்கள்
மூன்றாம் பரிசுகள்-99
பாக்கெட் டிரான்ஸிஸ்டர்கள்
மற்றும் 333 சிறப்புப் பரிசுகள்

*மிகவும் சுலபம்!*

எவ்வாறு பங்கு கொள்வது: உங்கள் நியூட்ரின் டீலரிடமிருந்து போட்டித்தாளை வாங்கி, சித்திரத்தை வண்ண ஓவியமாக்கி மகிழுங்கள். ரூபாய் 1 விலையுள்ள நியூட்ரின் மிட்டாய்ப் பாக்கெட்டிலுள்ள நியூட்ரின் முயலாரின் ஸ்டாம்பை போட்டித் தாளில் ஒட்டி, உங்களைப்பற்றிய விவரங்களைப் பூர்த்தி செய்து, கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்புங்கள்.

"நியூட்ரின் வண்ணம் தீட்டும் போட்டி"
C/o. நியூட்ரின் கன்பெக்ஷனரி கம்பெனி பிரைவேட் லிமிடெட்,
பலமனேர் ரோடு, சித்தூர் (ஆ.பி.)

பரிசுக்குரிய ஓவியங்கள், சிறந்த ஓவியர்களின் குழுவால் தேர்ந்தெடுக்கப்படும்.

இன்றே வண்ண ஓவியம் தீட்டுங்கள்—
நீங்களே பரிசைப் பெறுபவராகலாம்!

அது போகட்டும். இன்றைக்கு வீட்டுக்குப் போவதற்கு அவசரம் என்ன ?''

''இரண்டு நாட்களாகச் சீதாவுக்கு உடம்பு அதிகமாயிருக்கிறது. அவளுடைய மன நிலை மேலும் கெட்டிருக்கிறது. அதனால்தான் சீக்கிரம் வீடு போகிறேன், ஒரு மாதம் லீவு எடுத்து அவளை மதராஸில் கொண்டு போய் விட்டு வரலாம் என்று இருக்கிறேன்.''

''ஓகோ! இப்போது தெரிகிறது. நீங்களும் சீதாவும் மட்டும் போகிறீர்களா? தாரிணியும் கூட வருகிறாளா ?''

'' நீங்கள் சீதாவை மதராஸில் கொண்டு போய் விட்டு விட்டு பம்பாய்க்குப் போகிறீர்களாக்கும்!''

''உங்களுக்கு எப்படித் தெரிந்தது ? கிட்ட இருந்து கேட்டது போலச் சொல்லுகிறீர்களே?'' என்றான் ராகவன் அதிசயத்துடன்.

''பாம்பின் கால் பாம்புக்குத் தெரியும் என்ற பழமொழி தெரியாதா ?'' என்றாள் பாமா.

இந்தச் சமயத்தில் பங்களாவுக்குள்ளே டெலிபோன் மணி அடித்தது. ஏற்கனவே பங்களாவுக்குள் சென்றிருந்த ஸ்ரீ ஆதிவராகாச்சாரியார் டெலிபோனை எடுத்து, ''யார்?'' என்று கேட்டுவிட்டு, ''மிஸ்டர் ராகவனுக்கு டெலிபோன்'' என்றார்.

ராகவன் உள்ளே போய் டெலிபோனை வாங்கிச் செய்தியைக் கேட்டான். அவனுடைய முகத்தில் கவலையும் பயமும் குடிகொண்டன.

'' என்ன? என்ன?'' என்று தாமாவும் பாமாவும் கேட்டார்கள்.

'' சீதா சாயங்காலம் வெளியில் உலாவச் சென்றவள் இன்னும் திரும்பி வரவில்லையாம், வேலைக்காரன் சொல்கிறான் !''

'' சீக்கிரம் போய்ப் பாருங்கள். சாயங்காலம் எட்டு மணி சுமாருக்கு ஜந்தர் மந்தர் பக்கத்தில் ஏதோ கலாட்டா என்றும் துப்பாக்கிச் சத்தம் கேட்டது என்றும் விருந்தில் பேசிக் கொண்டார்கள்!'' என்றாள் தாமா.

''சீதாவுக்கும் துப்பாக்கிச் சத்தத்துக்கும் என்ன சம்பந்தம் இருக்க முடியும்?'' என்று ராகவன் கேட்டான்.

''இந்தக் காலத்தில் எப்போது என்ன நடக்கும் என்று சொல்வதற்கில்லை. எல்லாவற்றுக்கும் உடனே போய்ப் பாருங்கள். ஏதாவது உதவி தேவையிருந்தால் எங்களுக்கு டெலிபோன் பண்ணத் தயங்க வேண்டாம் !'' என்றாள் பாமா.









''ஆமாம், அப்பா! சீக்கிரம் போய்ப் பார் ! அவசியமாயிருந்தால் டெலிபோன் பண்ணு!'' என்றார் ஆதிவராகாச்சாரியார்.

* * *

சௌந்தர ராகவன் வீடு போய்ச் சேர்ந்த பிறகு புதிய விவரம் எதுவும் தெரிந்து கொள்ள முடியவில்லை. சாயங்காலம் வழக்கம்போல் உலாவச் சென்ற அம்மாள் திரும்பி வீட்டுக்கு வரவில்லை என்று மட்டும் வேலைக்காரர்கள் சொன்னார்கள்.




''மீட்டர் ரூ. 4-80 காட்டும்போது, நான் கொடுத்த ஐந்து ரூபாயைப் பெற்றுக் கொண்டு மீதி சில்லறை இருபது பைசாவை நான் கேட்காமலேயே கொடுத்த வள்ளலே, தருமதுரையே, ஹரிச்சந்திரன் பரம்பரையில் வந்த சத்தியசந்தரே...''

''யாராவது சிநேகிதர்கள் வீட்டிலிருந்து டெலிபோன் ஏதாவது வந்ததா?'' என்று ராகவன் கவலையுடன் கேட்டான்.

''சிநேகிதர்கள் வீட்டிலிருந்து டெலிபோன் வரவில்லை. ஆனால் போலீஸ் ஸ்டேஷனிலிருந்து நாலு தடவை கூப்பிட்டார்கள்'' என்று சமையற்காரப் பையன் சொன்னான்.

ராகவன் சிறிது திடுக்கிட்டு, ''போலீஸ் ஸ்டேஷனிலிருந்து என்ன செய்தி வந்தது?'' என்று கேட்டான்.

''ஒன்றும் இல்லை. 'எஜமான் வீட்டுக்கு வந்துவிட்டாரா?' என்று கேட்டார்கள். அவ்வளவுதான்!'' என்றான் சமையற்காரப் பையன்.

பிறகு ராகவன் போலீஸ் ஸ்டேஷனுக்கு டெலிபோன் செய்தான். அவனுக்குத் தெரிந்த சிநேகிதரான போலீஸ் உத்தியோகஸ்தர் பேசினார்.

''யார் மிஸ்டர் ராகவனா? உங்களை ஒன்பது மணியிலிருந்து கூப்பிட்டுக் கொண்டிருக்கிறேன். விருந்துக்குப் போய் இப்போதுதான் திரும்பினீர்கள் போலிருக்கிறது! இங்கே உடனே புறப்பட்டு வந்தால் நல்லது!'' என்றார்.

''என்ன விசேஷம்?'' என்று ராகவன் கேட்டான்.

''விசேஷத்தை நேரில்தான் சொல்லவேண்டும். உடனே புறப்பட்டு வாருங்கள்!'' என்று சொன்னார் போலீஸ் அதிகாரி.

''இங்கே எனக்கு ஒரு தொந்தரவு நேர்ந்திருக்கிறது. என்னுடைய மனைவி சீதா சாயங்காலம் உலாவச் சென்றவள் இன்னும் திரும்பி வரவில்லை. தகவல் ஒன்றும் கிடைக்கவில்லை!''

''ஓஹோ! அப்படியா சமாசாரம்? நீங்கள் உடனே புறப்பட்டு வரவேண்டியது இன்னும் முக்கியமாகிறது!'' என்றார் அதிகாரி.

* * *

சௌந்தர ராகவன் போலீஸ் ஸ்டேஷனை அடைந்ததும் இன்ஸ்பெக்டர் முதலில் சீதாவைப் பற்றி அவனிடமிருந்து தகவல் கேட்டுக் கொண்டார்.

வேலைக்காரர்கள் சொன்னதை அவரிடம் கூறிவிட்டு, ''உங்களிடம் ஏதாவது தகவல் கிடைத்திருக்கிறதா?'' என்று ராகவன் கேட்டான்.

''கிடைத்திருக்கிறது; ஆனால் உபயோகமான தகவல் இல்லை!'' என்றார் இன்ஸ்பெக்டர்.

பிறகு, ஒரு கைத் துப்பாக்கியை எடுத்து மேஜையின்மேல் வைத்து, ''இது யாருடையது, தெரியுமா?'' என்றார்.

ராகவன் அதைப் பார்த்துத் திடுக்கிட்டான். பிறகு தயக்கத்துடன், ''எனக்குத் தெரியாதே?'' என்றான்.

''ராகவன்! என்னிடமே மறைக்கப் பார்க்கிறீரா? அழகாயிருக்கிறது!'' என்றார் இன்ஸ்பெக்டர்.

''இல்லை; ஆமாம்; மன்னிக்க வேண்டும். முதலில் பார்த்தபோது தெரியவில்லை. என்னுடையதுதான். எப்படிக் கிடைத்தது?'' என்று உளறித் தடுமாறினான் ராகவன்.

''நீங்கள் தகவல் கொடுத்திருந்தீர்கள், அல்லவா? அந்தப் புரட்சிக்கார ஆளிடந்தான் இருந்தது. அவனுக்கு எப்படிக் கிடைத்திருக்கும்? யார் கொடுத்திருப்பார்கள்?''

''சத்தியமாக எனக்குத் தெரியாது!'' என்றான் ராகவன்.

பிறகு அவனை இன்ஸ்பெக்டர் போலீஸ் ஸ்டேஷன் 'லாக்-அப்' அறைக்குள் அழைத்துச் சென்றார். அங்கே சூரியா தலையிலும் தோளிலும் கட்டுக்களுடன் உணர்வின்றிப் படுத்திருந்தான்.

''இவனைக் கைது செய்வது சுலபமான காரியமாயில்லை. நாலு போலீஸ் ஜவான்களைத் திமிறிக் கொண்டு தப்பிக்கப் பார்த்தான். அதன் பயனாக இவன் மண்டையிலும் தோளிலும் நல்ல அடி! மண்டை பிளந்தேவிட்டது!'' என்றார் இன்ஸ்பெக்டர்.

(தொடரும்)

ஜாங்கோ ஜக்கு

கதை: குட்டி கிருஷ்ணன்

சித்திரம்: ராஜு

9











பாண்டிச்சேரியில் இரண்டு நாள் தங்கிய சினிமாக் குழு, பெரிய பரபரப்பை மக்களிடம் ஏற்படுத்தி விட்டுச் சென்னை நோக்கிப் புறப்பட்டது. செல்லும் வழியில் படப்பிடிப்பும் தொடர்ந்தது. ஜக்குவுடைய குதிரையின் சேணத்துக்கு அடியில் ஒரு ரகசிய அறையில் வைரங்கள் பதுக்கப் பட்டிருந்தன. அப்பண்ணா, கப்பண்ணா தவிர அக்குழுவில் வேறு யாருக்கும் தெரியாது இது!







ஓடி வந்த ஜக்கு பாய்ந்து ஏறப் போக, அந்த படியில் கால் சிக்கிக் கொண்டது. சேணத்தைக் கரம் பற்றியது. குதிரையோ பறந்தது!


சற்று நேரத்துக்குப் பின் குதிரை மனமுவந்து நின்றதும்...
ஜக்கு! பிரமாதம் போ! இந்த ஸ்டண்ட் காட்சி ரசிகர்களை 'அஷேக்' ஆக்கி விடும்!
ப்பூ! ரொம்பக் கஷ்டப்பா போச்சு ஸார்!
யார் அங்கே? அப்பிள் ஜூஸ் கொண்டா!


ஆப்பிள் ஜூஸை வாங்கித் தன் கரத்தால் தந்தாள் பொன்மொழி.
'திலகங்களின் திலகம்' என்று இங்கே உங்களுக்குப் பட்டம்; 'ஹாலிவுட் ஜக்கு' என்று ஷியான் கானரிக்கு அங்கே பாராட்டு!
பொன்மொழி! பாராட்டுக்களாம் என்னை சீராட்டு!


ஜகஜ் ஜால ஜக்குவே! அடுத்த டேக்குக்கு ரெடியா?
போதும் ஸார் போதும்! எனக்கு சினிமாவும் வேணாம், ஒண்ணும் வேணாம்! இடுப்பு ஒடிஞ்சு போச்சு!


இப்படி எங்களைக் கைவிடலாமா? இந்தக் காட்சியிலே ஹீரோயின் குளிக்கிறா; வில்லன் அவளிடம் வம்பு பண்ணுறான். அப்போ...
குளிக்கிற காட்சியா? இதோ நான் தயார்!


வா! ரத்தத்திலே குளிப் பாட்டறேன், உன்னை! என்னைக் கடந்து தானே அவகிட்ட போகணும் நீ, இந்தக் காட்சியில்?

தொடரும்

# ராஜாஜியின் ஜெயில் டைரி

**1922 ஜனவரி, 9உ.**

நாங்கள் என்னவோ சிறையில் சந்தோஷமில்லாமல் இருப்பதாகச் சொல்ல முடியாது. நாங்கள் அரை டஜன் பேர் ஆஸ்பத்திரியில் மாலையில் கதவை இழுத்துப் பூட்டிய பிறகு பழைய காலத்துச் சரித்திரங்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருக்கும்பொழுது எங்களுக்குச் சிறையில் இருப்பதான எண்ணமே கிடையாது. எங்கோ விடுமுறை நாட்களில் எல்லோரும் இன்பமாக இருப்பது போலவேதான் இருக்கிறது.

இங்கே இருந்து கொண்டிருந்தால் என்னுடைய குழந்தைகளுக்கும் இறந்து போன என் அண்ணு குழந்தைகளுக்கும் நான் செய்ய வேண்டிய கடமைகளை எப்படி நிறைவேற்றுவேன் என்ற எண்ணமானது அடிக்கடி என் மனத்தில் எழுந்து கொண்டேயிருந்தது. இந்த எண்ணம் வந்து என் மனத்தை எதிலும் ஊன்றவொட்டாமல் செய்தே வருகிறது. நானுக என்ன செய்ய முடியும்? எல்லாவற்றையும் கடவுள் வசம் ஒப்புவிப்பதைத் தவிர நான் செய்யக் கூடியது யாது?

முகமது ஹுஸேனுக்கு வயது பத்தொன்பதுதான் என்றும் ஷாவின்யூக்குக்கு இருபதுதான் என்றும் இன்றுதான் அறிந்தேன். ஆச்சரியமடைந்



தேன். சாதாரணமாக நம்முடைய சிறுவர்கள் அந்த வயதில் அவர்களைப்போல் உடலிலும் உள்ளத்திலும் முதிர்ச்சி அடைந்திருப்பதில்லை. முகமதுஹுஸேன் பக்தி சிரத்தையுடன் பகவத்கீதையை வாசித்துக் கொண்டும் நூல் நூற்றுக் கொண்டும் இருக்கிறுர்.

**1922, ஜனவரி 10உ.**

செவ்வாய்க்கிழமை. நேற்று முதல், முதலாவது பகுதியைப் பகற்பொழுதிலும் பூட்டி வைக்க ஆரம்பித்துவிட்டார்கள் என்று அறிகிறேன். அவசியமான காரியங்களுக்காகக் குறிப்பிட்ட நேரத்தில் மட்டும் வெளியே வர அனுமதிக்கிறுர்களாம்.



ரங்கம் செட்டி சின்னஞ்சிறு அசௌகரியங்களைக் கூடத் தாங்க முடியாமல் இருப்பதால் சிறை வேலைக்காரர்கள் எல்லோரும் அவருக்கு விரோதமாகவே இருக்கிறுர்கள். இந்த வேலைக்காரர்கள் யார்? அவர்களும் கைதிகள்தான். அதனுல் நாம் குறைகூறப் போனுல் நம்முடன் வாழும் கைதிகளைத்தான் குறை கூறுவதாக இருக்கின்றது. படித்தவர்கள் சிறைக்கு வந்தால் அதனுல் கைதிகளுக்கும் அதிகாரிகளுக்கும் அருவருப்பாகவும் அசௌகரியமாகவும் ஆகிவிடலாகாது. அதிகாரிகள் இஷ்டம் போல் நாம் நடப்பதில்லை. அதனுல் அவர்களுக்கு நம்மைக் காணவே விஷம் போல் இருக்கிறது. அது எப்படியாயினும் அடிமைகளாக நடத்தப்படும் ஏழைக் கைதிகளுக்கும் நாம் கசப்பாக ஆக வேண்டியது ஏன்? நாம் அவர்களுக்குப் பண்பாடு, நல்லுணர்ச்சி, நம்பிக்கை ஆகியவைகளாலாகிய அஞ்சனத்தைத் தரவேண்டுமல்லவா? அவர்கள் படும்

வேதனை போதாதென்று அதிக வேதனை தரலாமா ?

சிறையைப் பார்வையிட்டு அவசிய மான சீர்திருத்தங்களை அவ்வப்போது கூறுவதற்காக அரசாங்கத்தாரால் நிய மிக்கப்பட்ட உத்தியோகப் பற்றற்ற வராகிய ஆதிசேஷய்யா என்பவர் இன்று காலை வந்திருந்தார். என் படுக்கையண்டை வந்து என்னைப் பற்றி விசாரித்தார். அவர் குழம்பு விஷயத்தைப் பரிசிலனை செய்யத் தீர் மானித்திருப்பது போல் தெரிகிறது. கைதி ஒவ்வொருவருக்கும் தினந் தோறும் நாலு அவுன்ஸ் பருப்பு கொடுக் கிறார்கள். ஆனால் அவ்வளவு பருப்பும் கைதிகளிடம் வந்து எட்டுவதில்லை. ஏதோ குழம்பில் மண்டி என்ற பெய ரால் அது சமையல் அறையிலேயே தங்கி விடுகிறது ! பருப்பு முழுதும் கைதிக்குக் கிடைக்கும்படி செய்தால் போது மானது என்று நான் அவரிடம் கூறி னேன். அந்தக் கனவான் காலை பத்து மணிக்கே வந்திருந்தபடியால் இன்று மட்டும் குழம்பு நன்றாகவே இருந்தது. நான் நிதான் சிங் தரும் பருப்பையே உண்பதால் எனக்குக் குழம்பு விஷயம் தெரியாது. ஆனால் ரங்கம் செட்டி தான் அவ்விதம் கூறுகிறார்.

காலையில் நன்றாக இருந்ததாம். ஆனால் மாலையில் பழையபடியே ஆகி விட்டதாம். ஆதிசேஷய்யா மாதிரிச் சிறையைப் பார்வையிடும் இன் னொருவர் திரு பத்மநாப நாயுடு. ஒரு வாரத்துக்குமுன் வந்திருந்தார். இந்த மாதிரி வந்து பார்வையிடுபவர்கள் ஆறு பேர்கள் இருப்பதாக அறிகிறேன். அவர் களுக்கு ஆஸ்பத்திரிக்கு வர நேரமில்லை போலும். வந்தாலும் கைதிகளை விசா ரிக்க அவர்களுக்கு நேரம் கிடைப்ப தில்லை.

எனக்கு ராமாயண நூல் கொடுத்த கைதிக் காவலாளி பரசுராமன் என்பவர் சைனாவிலும் கிழக்கு ஆப்பிரிக்காவிலும் யுத்த சேவை செய்தவர். "போர்க் களத்தில் இருந்தபொழுது ஒரு குண்டு கூட என் பக்கத்தில் வரவில்லை. ஆனால், வீட்டுக்குத் திரும்பி வந்ததும் கொலை செய்ததாகச் சொல்லி என்னை இங்கே இழுத்து வந்துவிட்டார்கள்" என்று அவர் கூறியது எங்கள் மனத்தில் அதிக இரக்கம் உண்டுபண்ணுவதா யிருந்தது. அவரை இன்னும் இரண்டு மாதங் களில் விடுதலை செய்து விடுவார்கள். அவர் விசேஷமான நற்குணம் படைத்தவர்.

# படித்துப் பாருங்கள்

## பாசம்

இந்நூலில் அடங்கியிருக்கும் பன்னிரண்டு சிறுகதைகளும், வேறுவேறு அமைப்புக்களைக் கொண்டு சுடர் விட்டு ஒளிர்கின்றன.

"ஸரமாவின் அறிவுரை" இராமா யணத்தை அடிப்படையாகக் கொண்டது. விபீஷணனது மனைவியைப் பற்றி இராமா யண காவியத்தில் விவரமாக எதுவும் வர வில்லை. இந்நூலாசிரியர் விபீஷணனுடைய பத்தினி ஸரமாவைப் பற்றி மிகவும் சுவை யான கதையொன்றைப் புனைந்திருக்கிறார். அவளுடைய அறிவுக் கூர்மை வியப்பைத் தருகிறது. விபீஷண சரணாகதிக்கு ஆக்கம் அளித்தது ஒரு பெண்தான் என்பதை நயமாகக் கூறியிருக்கிறார் ஆசிரியர்.

அதிர்ச்சியூட்டும் சம்பவமோ, திகிலூட்டும் திருப்பமோ, ஒரு சிறுகதைக்குத் தேவை யில்லை. பாலைத் தயிராக்க ஒரு சிறு துளி மோர் போதும். ஒரு சொட்டுக் கண்ணீரை வைத் துக்கொண்டு முழு வடிவம் பெற்ற சிறு கதையை ஆசிரியர் உருவாக்கி யிருக்கிறார், "கண்ணீர்ச் சொட்டு" என்ற சிறு கதையில்.

மற்றச் சிறுகதைகளும் ஒன்றுக்கு ஒன்று சளைக்காமல், கலை உணர்வோடு தரத்தில் உயர்ந்து நிற்கின்றன.

எழுதியவர்: இ. சந்திரசேகரன், பிரசுரம்: வானதி பதிப்பகம், சென்னை-17; விலை ரூ. 3.

## திருவேற்காடு ஸ்ரீ கிருஷ்ணமாரி குறவஞ்சி

தேவி கருமாரி அம்மன் கலியுகத்தில் கண் கண்ட தெய்வமாய் விளங்குகிறாள். எல்லாம் வல்ல பராசக்தி பல்வேறு திருவுருவங் கொண்டு, பல்வேறு திருநாமங்கள் பெற்றுப் பல்வேறு தலங்களில் எழுந்தருளியிருந்து பற் பல திருவிளையாடல்கள் புரிகிறாள். திருவேற் காடு கருமாரியம்மனை முனிபுங்கவரான அகஸ் தியர் வழிபட்டதாக வரலாறு கூறுகிறது.

ஸ்ரீமத் சுவாமி ராமதாசர் என்னும் அருட் கவி ஸ்ரீ தேவி கருமாரி தாசர் தேவி கரு மாரியைப் பற்றிய இந்நூலை அழகிய தமிழில் இயற்றியிருக்கிறார். பக்திச் சுவை மிகுந்து நிற்பதால் பாடல்கள் நம்மை ஈர்க்கின்றன. உதாரணத்துக்கு ஒன்றைப் படியுங்கள்:

"வேங்கட நாதன் தங்கை
வேற்காட்டில் வாழும் சீலி
ரீங்கார நாத சக்தி
எழுவரில் இளைய சூலி
ஓங்கார ஓசை கேட்டு
உளமகிழ் கிருஷ்ண மாரி
பாங்காரும் பதம் பணிந்தோர்
பரவசம் எய்துவாரே."

பிரசுரம்: சூப்பர் பவர் பப்ளிகேஷன்ஸ், நெ. 21, கங்குராம செட்டித் தெரு, சென்னை-1, விலை ரூ. 3.00.

மனதிற்குகந்த
தூய வெண்மையைப் பெற

# ஓ ஓ பி
# நீலம்

ஓ ஓ பி நீலம் உடனடியாக முற்றிலும்
கரைந்துவிடும் வெள்ளைத் துணிகள் ஒரே
சீராக பால்போல் பளிச்சிடுகின்றன.
உங்கள் சட்டைகள், புடவைகள், பெட்ஷீட்டு
கள் மற்ற துணிகள் எதையும் வெள்ளை
வெளேர் என்று ஆக்க மிகவும் சிக்கனமான
வழி இது. நீலப்புள்ளி விழாது, மஞ்சள்
திட்டு தெரியாது.

ஓ ஓ பி நீலம் மேற்கு ஜெர்மன் கூட்டுறவுத்
தயாரிப்பு. இந்தியாவின் மிக நவீன அல்டிராமரைன்
தொழிற்சாலையில் உருவானது.






தயாரிப்பாளர்:
அல்டிராமரைன் & பிக்மெண்ட்ஸ்
லிமிடெட், அம்புத்தூர், சென்னை 53

UPL/6546

# "புல்லுக்கும் ஆங்கே..."

மாரி – அறவாழி

**தா**ழ்வாரத்தில் நின்று கையை வெளியே நீட்டினான் ராமு.

பார்ப்பதற்கு மழை நின்றுவிட்டதுபோல் இருந்தாலும் தூவானம் பலமாக விழுந்து கொண்டுதான் இருந்தது.

அவன் அடி வயிறு கலங்கியது. இன்னும் இருபது நிமிடங்கள்தான் இருக்கின்றன. அதற்குள் அவன் மவுண்ட்ரோடு போய்ச் சேர்ந்தாக வேண்டும். என்ன செய்வது?

டாக்ஸியிலோ டவுன் பஸ்ஸிலோ போகலாம் என்றால் காசு இல்லை. மாமா வீட்டில் சோறுதான் 'ஓசி'யாகப் போடுவார்களே தவிர பாக்கெட் மணியுமா கொடுப்பார்கள் ?

ஓட்டமாக ஓடினால் வேண்டுமானால் பத்து மணி அடிப்பதற்குள் போய்ச் சேர்ந்துவிட முடியும். ஆனால் அப்படிச் செய்வதற்கும் முடியாமல் தூறல் விழுந்து கொண்டிருந்தது.

பத்தடி போவதற்குள் சட்டையும் பேண்டும் தெப்பமாக நனைந்துவிடும் என்பதில் ஐயமில்லை. அந்தக் கோலத்தில் எப்படிப் போய் நிற்பது இண்டர்வ்யூவில் ?

ராமுவுக்கு இருக்கும் உடைமைகளில் சற்று நன்றாக இருப்பதும், கிழியாமல் 'டீஸண்டா'க இருப்பதும் வெண்மையான அந்த டிரில் பேண்டும் லாங்க்ளாத் ஷர்ட்டும் தான்.

அணிந்து கொள்வதற்கு முதல் நாள், காலை நேரம் முழுதும் செலவழித்து நன்றாகத் துவைத்து உலர்த்தி, கைகளாலேயே நீவி மடிப்பை உண்டாக்கி இரவெல்லாம் தலையணைக்கு அடியில் வைத்துப் படுத்தது மற்றவர்களுக்கு எப்படித் தெரியும்?

ஒன்றா இரண்டா ஒன்பது மாதங்கள் கழித்து அவனைத் தேடி வருகிறது அதிர்ஷ்டம். அதற்குள் எத்தனை எத்தனை சித்திரவதைகள் !

இரண்டு வேளைச் சோறு போடுவதற்காக அவன் மாமா அவனை எப்படி யெல்லாம் பிழிந்து எடுத்துவிட்டிருக்கிறார். அவர் நடத்தும் பட்டறையில், காலையிலிருந்து மாலை வரை சம்மட்டி தூக்கி அடிக்க வேண்டும், வீட்டு வேலைகளைச் செய்ய வேண்டும், கால் நடையாக நடந்து சென்று பாக்கிகளை வசூலித்து வர வேண்டும். பள்ளிக்கூடம் போகும் பிள்ளைகளுக்குச் சாப்பாடு எடுத்துச் செல்ல வேண்டும், இன்னும் இனம் பிரிக்க முடியாத எத்தனையோ வேலைகள். அத்தனைக்கும் சம்பளம் என்ன? இரண்டு வேளைச் சாப்பாடு மட்டும்தான்!

அந்தக் கஷ்டங்களெல்லாம் மறைகிற சுப நேரம். இதோ, அவனைத் தேடி வந்து விட்டது. இந்த இண்டர்வ்யூ உருவத்தில் ! இதில் மட்டும் தேர்ச்சி 'பெற்று அந்த வெள்ளைக்காரக் கம்பெனியில் உத்தியோகம் கிடைத்துவிடுமானால் அவன் வாழ்வே ஒளி மயமாகி விடும்.

**வா**னத்தில் தென்பட்ட ஒன்றிரண்டு கரு மேகங்களும் காற்றில் கரைந்து மறைந்து விட்டன. ராமுவின் மனத்திலிருந்த கொஞ்சநஞ்ச மழை பயமும் போய்விட்டது. அவன் பேண்டும், சட்டையும் இனி மழையில் நனைவதற்கோ மடிப்பு கலைவதற்கோ வழியில்லை. கடைசிவரை 'நீட்'டாகவே இருக்கும்!

எதிரே வரும் மனிதர்களின் கைபட்டால் கூடச் சட்டையின் வெண்மை குலைந்துவிடும் என்ற ஜாக்கிரதை உணர்வுடன் எச்சரிக்கையாக, பிளாட்பாரத்தின் ஓரத்தில் நடந்து கொண்டிருந்த ராமு, இருந்திருந்தாற்போலிருந்து, ''முருகா!'' என்று பலமாகக் கூவிக் கொண்டு 'ஹை ஜம்ப்' செய்தான். அதே



நேரத்தில் 'சதக்'கென்ற ஓசையை உண்டாக்கிவிட்டு ஓடி மறைந்தது ஒரு பிளஷர். மறுகணம் பெட்ரோல் எண்ணெய் மிதக்கப் பாதையோரத்தில் தேங்கியிருந்த சாக்கடை நீர் ராமுவின் வெள்ளைப் பேண்டையும், ஸ்லாக்கையும் ஆவலோடு இறுக அணைத்துக் கொண்டது.

''அடடா.... துணி வீணாகிவிட்டதே...!'' என்று பரிதாபப்படுகிறார் அருகில் இருந்த கிழவர் ஒருவர்.

''ஸ்டியரிங்கைப் பிடித்து விட்டால் ஜம்போ ஜெட் பைலட் என்ற நினைப்பு வந்து விடுகிறது இந்தப் பயல்களுக்கு......''

டிரைவரைச் சாடுகிறார் இன்னொருவர். ஆனால் யார் சாடி என்ன பயன்? கார்க்காரன் அவன்பாட்டுக்கு ஓடி மறைந்து விட்டான்.

சுற்றியிருந்த எல்லோரும் ராமுவின் பேண்ட்டை வேடிக்கை பார்த்தனர். அவர்களுக்கு அது ஒரு வேடிக்கையாகப் போய் விட்டது. ஆனால் ராமுவுக்கோ அழுகை பொத்துக் கொண்டு வந்தது.

மாமா சொன்ன வேலையைக்கூட அரைகுறையாகப் போட்டுவிட்டு, ஆசை ஆசையாக இண்டர்வ்யூவுக்குப் புறப்பட்டு வந்ததற்குக் கை மேல் பலன் கிடைத்துவிட்டது.

இனி என்ன? புதிய வேலையும் கிடைக்கப் போவதில்லை; பழைய வேலையும் நிலைக்கப் போவதில்லை. தூய்மைக்கும் ஒழுக்கத்துக்கும், காலம் தாழ்த்தாமைக்கும் பெயர்போன வெள்ளைக்காரன் முன்போய் அழுக்குத் துணிகளுடன், நேரம் கழித்துக் கோமாளிபோல் போய் நின்றால் கழுத்தைப் பிடித்து வெளியே தள்ளிவிட மாட்டானா!

'' மரமாட்டம் வழியிலே நிக்கறியே! வழி விடு நைனா!'' என்று கூச்சலிட்டாள் ஒரு கூடைக்காரி.

ராமுவுக்கு அப்போதுதான் சுயபுத்தி வந்தது. 'என்னவானாலும் சரி, இண்டர்வ்யூ நடக்கும் இடத்துக்குச் சென்று பார்த்து விட்டு வந்து விடுவது' என்று மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு நடந்தான்.

இண்டர்வ்யூ நடக்கும் இடத்தில் இரண்டொருவரே மீதம் இருந்தனர். அவர்களும் பெரிய பெரிய பட்டம் பெற்றவர்கள் என்பதை அவர்களது ஆடம்பரமான நடையுடைகளும், ஆங்கிலப் பேச்சும் பறைசாற்றின. அவ நம்பிக்கையுடன் ராமுவும் போய்க் கடைசியாக உட்கார்ந்தான். நீண்ட நேரத்துக்குப் பின் அவனை உள்ளே கூப்பிட்டார்கள்.

அழுக்கே உருவெடுத்தது போல், சாக்கடைத் தண்ணீரின் ஈரம்கூட உலராத கோலத்துடன் தயங்கித் தயங்கி டைரக்டர் முன்னால் போய் நின்றான் ராமு.

அந்த வெள்ளைக்கார மனிதர் அவனை ஒரு முறை ஏற இறங்கப் பார்த்தார். இலேசான புன்னகை அவர் உதடுகளில் நெளிந்தது. முறைப்படி அவன் பெயரையும் மற்ற விவரங்களையும் விசாரித்தபின், '' உன் உடைகள் ஏன் இப்படி இருக்கின்றன?'' என்று கேட்டார்.

நடந்ததை மிகுந்த வருத்தத்துடன் சொன்னான் ராமு.

அவர் ஒன்றும் பேசவில்லை. சற்று நேரம் என்னவோ யோசித்துக் கொண்டிருந்தார். பின்னர், ''ஆல்ரைட்..... நீ போகலாம்...'' என்று கூறி அனுப்பிவிட்டார்.

மாமா வீடு திரும்பிய ராமுவுக்கு அன்று நல்ல பூசை கிடைத்தது.

'' நான் சொன்ன வேலையைச் செய்யாத உனக்கு இனி இந்த வீட்டில் இடமில்லை. உன் கிராமத்துக்குப் போய்ச் சேர்.....'' என்று கூறி அவன் பெட்டி படுக்கையை வெளியில் வைத்துவிட்டார் அருமை மாமா.

மறு நாள் ஊருக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்தான் ராமு. அப்போது அங்கே வந்த தபால்காரர் அவன் கையில் ஒரு கடிதத்தைத் திணித்துவிட்டுச் சென்றார். பிரித்துப் பார்த்தான் ராமு. மறுகணம் ஆச்சரியத்தாலும் மகிழ்ச்சியாலும் துள்ளிக் குதித்தான்.

நேற்று இண்டர்வ்யூவுக்குப் போன வெள்ளைக்காரக் கம்பெனியில் தனக்கு வேலை கிடைத்திருக்கிறது என்ற செய்தியை அவனால் நம்பவே முடியவில்லை.

ஆர்டரைத் தூக்கிக் கொண்டு உடனே வேலைக்குச் சென்றான் ராமு. டைரக்டர் அவனைக் கூப்பிட்டு வாழ்த்துக் கூறினார்.

''நேற்று நடந்த இண்டர்வ்யூவுக்கு இருநூற்றைம்பது பட்டதாரிகள் வந்திருந்தார்கள்.....அவர்களுக்குக் கிடைக்காத இந்த வேலை வெறும் டிப்ளமோ ஹோல்டரான உனக்குக் கிடைத்தது எப்படித் தெரியுமா?''

''எல்லாம் உங்கள் அன்பினால்தான் சார்!''

''அது சரியல்ல.... உண்மை என்ன தெரியுமா?..... நேற்று நீ இண்டர்வ்யூவுக்கு நேரமாகிவிட்டது என்ற கவலையுடன் வேகமாக வந்ததைப் போல், நானும் இண்டர்வ்யூ கொடுப்பதற்காக வேகமாகக் காரில் வந்து கொண்டிருந்தேன். வழியில் ஒரு நல்ல மனிதர் மேல் சேற்றை வாரி இறைத்துவிட்டது, என் பிளஷர். அவர் அதற்காக என்னைக் கோபித்துக் கொள்ளவில்லை. ஆனால் என் மனமோ உறுத்திக் கொண்டேயிருந்தது.... இண்டர்வ்யூவில் உன்னைப் பார்த்தவுடன் அந்த மனிதரின் நினைவு எனக்கு வந்துவிட்டது. அவருக்குச் செய்த குற்றத்தை, அதே போன்ற ஒரு நிகழ்ச்சிக்கு ஆளான உனக்கு உதவி செய்வதன் மூலம் ஈடுசெய்துவிடலாம் என்று தோன்றியது எனக்கு. அதனால்தான், அத்தனை பட்டதாரிகளையும் விட்டு விட்டு டிப்ளமா ஹோல்டரான உனக்கு உத்தியோகம் போட்டுத் தந்தேன்.... புரிந்ததா?''

ராமுவின் உடம்பு ஒரு விநாடி சிலிர்த்தது.

தழுதழுத்த குரலில் கூறினான்: ''தேங்க்யூ சார்.... ஒரு நல்ல மனிதரால் நான் பயன் பெற்றேன் என்பது மிகவும் பெருமைக்குரியது. அதற்குப் புகழ் சேர்க்கும் வகையில் உண்மையுடன் உழைத்து முன்னுக்கு வருவேன் என்று உறுதி கூறுகிறேன் சார்......''

சின்ன வயதில் படித்த ஔவையார் பாடல் அவன் மனத்தில் பளிச்சிட்டு மறைந்தது:

'' நெல்லுக் கிறைத்த நீர்
வாய்க்கால் வழியோடிப்
புல்லுக்கும் ஆங்கே
பொசியு மாம்......!''

# இலக்கிய  மலர்கள்

## 4. பூப்போன்ற கல்!

வாடி உலராமல் ஞான நிழல் பரப்பும் போதி மரத்தின் அடியில் புத்த பகவான் தவத்தில் இருக்கிறார்.

இரவும் பகலும் சுழல்கின்றன. சூரியனுடைய உதயமும் சந்திரனுடைய உதயமுமாகக் கால வட்டம் சுற்றுகிறது. பகவான் மோனத் தவத்தில் கண்கள் மூடி அமர்ந்திருக்கிறார்.

மாரன் என்ற வல்லவன், நல்ல செயல்களுக்கெல்லாம் ஒரு முட்டுக்கட்டை! புத்தருக்கு ஞானம் சித்திக்கக் கூடாது என்பதற்காகத் தன் மகளிரான காமம், வெகுளி முதலானவருடன் படையெடுத்து வந்து இடையூறு செய்கிறான். ஆனால் புத்தரிடம் அந்த முயற்சி பலிக்கவில்லை. வைராக்கியத்தோடு தவம் புரிந்து புத்த பெருமான் ஞானம் எய்துகிறார். மாரனை வென்று "மாரஜித்" என்றே பெயர் பெறுகிறார்!

இந்த உண்மையை நினைவில் கொண்டு ஒரு பழம் பாடலைப் பார்ப்போம்:

போதி மரத்தினடியில் ஞானத் தவம் கூடி அமர்ந்திருக்கிறாரே சித்தார்த்தர், அவருடைய மனம் எப்படிப்பட்டது? பிறருடைய துயரத்தைக் கண்டு, மக்களின் இன்னல்களைப் பார்த்துத் தாங்க முடியாமல் உருகி ஓடிய மெல்லிய மனம் அது! அவருடைய துறவுக்குக் காரணமே அந்த மென்மைதானே! ஆனால் அத்தகைய மெல்லிய மனத்திலே மாரன் மகளிருடைய கண்கள் என்ற வாள் அத்தனையும் சேர்ந்து பாய்ந்து செல்ல முயன்றும் பாய்வதற்கு முடியவில்லையே! அப்படியானால் அந்த மனத்தை மெல்லியது என்று எப்படிச் சொல்லுவது!

> வாடாப் போதி
>     மரகதப் பாசடை
> மரநிழல் அமர்ந்தோன்
>     நெஞ்சம், யார்க்கும்
> அருளின் நீர்த்தேன்
>     நிறைந்து,தனி நெகிழ்ந்து
> மலரினும் மெல்லிது
>     என்ப!

[வாடா — உலராத. பாசடை—பசிய இலை. மரகதப் பாசடை — பச்சை நிறத்துக் கொழுந்துகள் நிறைந்த. யார்க்கும்—எளியவர், அன்னியர், மறு உதவி செய்ய இயலாதவர், யாராயிருந்தாலும், எந்த உயிராக இருந்தாலும். தனி — மிகவும். நெகிழ்ந்து — நெகிழ்ந்து. என்ப—என்று சொல்லுவார்கள்.]

புத்தனுடைய கருணை உள்ளம் அருளாகிய நீர்த்தேன் நிறைந்து மிகவும் நெகிழ்ந்து மலரை விட மென்மையானது என்று சொல்வார்கள்.

இதயத்தினுடைய பசுமையையும் இரக்கத்தையும் நெகிழ்ச்சியையும் உலராத தன்மை

மீ. ப. சோமு

யையும் சொல்வதற்கு வரும் போது, பாட லின் ஆரம்பமே பசுமையோடும், நிழலோடும், தன் வர்ணனையைத் தொடங்குகிறது.

அந்த மெல்லிய மலர் போன்ற நெஞ் சத்தை,

காமர் செவ்வி
மாரன் மகளிர்
நெடுமா மழைக்கண்
விலங்கிநிமிர்த் தெடுத்த
வாளும் போழ்ந்தில
ஆயின்
யாதோ மற்றுஅது
மெல்லிய ஆறே!

[காமர் செவ்வி—மோக அழகு பொருந்திய. நெடுமா மழைக்கண் — நீண்ட மாமழை விழிகள் ஆகிய. விலங்கி நிமிர்ந்தெடுத்த வாளும் — தீட்டிக் கூர்மை செய்யப்பட்ட வாளும். போழ்ந்தில ஆயின் — பிளக்க முடிய வில்லையென்றால். மற்று அது மெல்லிய ஆறு யாதோ — அந்த மனம் மென்மையானவாறு தான் என்னே, எப்படியோ !]

புத்தனுடைய உள்ளம் கருணை யென்ற உணர்ச்சி மேலிடும்போது, மலரைவிட மென்மையாகிறது. ஆனால் காம உணர்ச்சிகள் தாக்கும் போது வீறும் உறுதியும் கொண்டு கல்லைவிடக் கடினமாகிறது. இப்படிப்பட்ட மலரும் கல்லும் இணைந்த ஓர் இங்கித முரண் பாடுதான் மகான்களுடைய இதய இயல்பு. துறவு என்றால் இரக்கத்தையும் கருணையையும் அன்பையும் துறந்து விடுவதல்ல. கெட்ட குணங்களை மட்டும் துறப்பதே அது! அதையே சித்திரிக்கிறது இந்தக் கவி மலர் :

வாடாப் போதி
மரகதப் பாசடை
மாநிழல் அமர்ந்தோன்
நெஞ்சம் யார்க்கும்
அருளின் ஈர்ந்தேன்
நிறைந்தூனி நெகிழ்ந்து
மலரினும் மெல்லிது
என்ப; அதனைக்
காமர் செவ்வி
மாரன் மகளிர்
நெடுமா மழைக்கண்
விலங்கிநிமிர்த் தெடுத்த
வாளும் போழ்ந்தில
வாயின்
யாதோ மற்றது
மெல்லிய வாறே!

பல நூறு ஆண்டுகளுக்கு முன்பு எழுதப் பட்ட மிக மிகப் பழைய பாடல் இது! உலக இச்சைகளை வெல்லுவதாக நினைத்துக் கொண்டு, இதயத்தில் வாஞ்சையும் அன்பும் இல்லாமல் வறண்டு போய் மரக்கட்டைகளாக இருக்கக் கூடிய, இருந்து அதுவே ஞான நிலை என்று பெருமைப்பட்டுக் கொள்ளக்கூடிய, அரக்கர்களுக்கு இந்தப் பாடல் சித்திரிக்கிற இதயத்தின் இரட்டை இயல்பு ஒரு படிப் பினையும் தெளிவும் ஆகும். வாடி உலராமல் பசுமையோடும் உறுதியோடும் நின்று ஞான நிழலைப் பரப்புகிற போதி மரமே இந்த இயல் புக்கு உருவகமாகத் திகழ்கிறது!

தீய ஆசைகளை வெல்லும்போது இதயம் கடினம் அடைகிறது. ஆனால் அந்தக் கடின மானது கருணையை அழித்துவிடக் கூடாது. சிவபெருமானுடைய நெற்றிக் கண்ணில் மன்மதனை வெல்கிற நெருப்பு இருக்கிறது. ஆனால் அவனுடைய தலையிலே கருணை வெள்ள மான கங்கை பொழிகிறது. ஞானிகளுடைய தெய்வ சித்தியும் இத்தகையதே!

உறுதிக்கும்,
நீடித்த
உழைப்பிற்கும்
உத்திரவாதமானது

# செட்டிநாடு சிமெண்ட்



விரைவில் படிந்து, நன்றாக இறுகி கட்டுமானங்கள் உறுதியாக அமைய உதவுவதால், குறைந்த அளவு செட்டிநாடு சிமெண்டே உபயோகத்திற்கு போதுமானதாக இருக்கிறது.

வீடுகள், சாலைகள், பாலங்கள், அணைகள் கட்ட ஏற்றது செட்டிநாடு சிமெண்ட். செட்டிநாடு சிமெண்டால் கட்டப்படும் கட்டுமானங்கள் நீண்ட நெடுங்காலம் நீடித்து நிற்கின்றன.

## செட்டிநாடு சிமெண்ட் கார்ப்பொரேஷன் லிமிடெட்,

6, அரண்மனைக்காரத் தெரு, சென்னை-1.
போன்: 25356. தந்தி: "BESTCEMENT"
தொழிற்சாலை: குமாரராஜா முத்தையா நகர், புளியூர் (கரூர்), திருச்சி மாவட்டம்.
போன்: 144 தந்தி: "CEMENT"




சேல்ஸ் டெப்போக்கள்:
3, முதல் மெயின் ரோடு, காந்திநகர் போஸ்ட், பெங்களூர்-9. போன்: 71715
18-C, சுக்கியாஸ் லேன், கல்கத்தா-1
போன்: 22-4986

EP.CC.17.

# மனச்சுமையும்



கு. வேங்கடரமணி

# கைச்சுமையும்

ஹோட்டல் வாசலுக்கு வந்ததும் இலகாவின் கால்கள் தயங்கி நின்றன. வலது கையில் பிடித்திருந்த பிளாஸ்டிக் பையை இடது கைக்கு மாற்றிக் கொண்டதும் சுமை குறைந்தாலும் விரல்கள் அப்படியே சிவந்து துவண்டு போயிருந்தன. பகல் முழுதும் டைப்ரைட்டரில் பக்கம் பக்கமாய்த் தட்டித் தீர்த்த விரல்கள்! இப்படியே ஒரு கையிலிருந்து மற்றொன்றுக்கு மாற்றிக் கொண்டு, பஸ்ஸில் இடம் பிடித்து வீடு போய்ச் சேருவதற்குள் எத்தனை பெரும் பாடு!

இலகா மீறிக் கொண்டு வந்த உள்ளச் சோர்வின் பிரதிபலிப்பான நெட்டுயிர்ப்பைக் கட்டுப்படுத்திக் கொள்ள முயன்றாள். வாழ்க்கை தன்னை வெகு வேகமாய் — ஒவ்வொரு வினாடியும் தவறாத ஒரு தீவிரத்தோடு— அலுப்பு நிறைந்த விரக்திக்குத் தள்ளிக்கொண்டிருப்பதை அவள் உணர்ந்தாள்.

சுமையை மீண்டும் கைமாற்றிக் கொண்டாள். இன்றைக்கு ஹார்லிக்ஸ், டானிக், மாத்திரை, ஆரஞ்சு பிஸ்கட்; நேற்று காப்பித்தூள், சர்க்கரை, வெண்ணெய்; நாளைக்குப் பருப்பு, மிளகாய், புளி.....

ஒன்று மாற்றி ஒன்றாய்ச் சுமந்து கொண்டு வாழ்க்கையையே சின்னச் சின்ன சுமைகளாய்த் தூக்கிக் கொண்டு நடக்கிற ஒரு பெரிய சுமை தாங்கி —

இலகா நினைவுகளில் இருந்து விடுபடச் சாலையில் பார்வையைத் திசை திருப்பினாள்.

நல்ல வேளை! அதோ சேது வந்துவிட்டான். நெரிசலைத் தாண்டி அவள் நிற்பதைப் புரிந்து கொண்டு நெருங்கி வந்தான்.

''இலகா! ஏன் நின்றுவிட்டீர்கள்?''

''உம்... ஒன்றுமில்லை.''

''அப்படியானால் சரி! ஆனால் நான் அப்படி நினைக்கவில்லை. ஏதோ ஒரு நினைவு வேகம் — சரியாகச் சொன்னால் நினைவு வேதனை — உங்களைச் சுற்றிக் கொண்டிருப்பது போலவும், அதில் நீங்கள் மூச்சுத் திணறுவது போலவும் இருக்கிறது.''

''அதெல்லாம் இல்லை.''

''வாங்க, போகலாம்'' என்றான் சேது.

அவள் ஹோட்டலுக்குள் நுழைவதற்குள் கூடையை மாற்றிக் கொள்ள முயன்றாள்.

''இப்படிக் கொடுங்க அதை'' என்று கையை நீட்டினான் சேது. சுமை கொஞ்ச நேரமாவது குறையட்டுமே என்று இலகா உடனே கொடுத்து விட்டாள்.

ஹோட்டலில் அந்தக் குறிப்பிட்ட மேஜையின் அருகில் போய் உட்கார்ந்தார்கள். ஒரு மாதமாய் மாலை நேரங்களில் அவர்கள் வந்து உட்காரும் — பழக்கமாகப் போய்விட்ட — இடம் அது.

'' என்ன சாப்பிடலாம்?''

''வழக்கம் போலத்தான்.''

''வெறும் காப்பியா ?''

''ஆமாம்!''

''நீங்க பகலில்கூட எதுவும் சாப்பிடவில்லை போலிருக்கே ?''

''எப்படித் தெரியும் உங்களுக்கு?''

''காண்டீனுக்குப் போகிற போதும் பார்த்தேன், திரும்பி வருகிற போதும் பார்த்தேன். நீங்க மட்டும் இடத்தை விட்டு அசையவே இல்லை. ஏன், டிபன் கொண்டு வரல்லியா? ஏதாவது வரவழைச்சுச் சாப்பிடக் கூடாதா?''

''ஹூம்!''

நீண்ட நேரம் தேங்கி நின்றுவிட்ட நெடுமூச்சு இப்பொழுது அவளையும் மீறி வெளிப்பட்டது. அவன் தோசை கொண்டு வரச் சொன்னான். இலகா மறுக்கவில்லை.

''இன்னிக்கு ஏன் இப்படி இருக்கீங்க ?'' என்று குறுக்கிட்டான் சேது.

''எப்படி?''

''ஏதோ தத்துவங்களைத் தேடிக் காத்திருக்கிற மாதிரி.''

அவனுக்குச் சிரிப்பு வந்தது.

''ஆமாம்! நானே ஆச்சரியப்படுகிறேன். என்னை அறியாமல் இன்னிக்கு ஏதோ புதிது புதிதாய் நினைப்புக்கள் வருகின்றன. இந்த ஹோட்டல் வாசல் வருவதற்குள், வந்து கொஞ்ச நேரம் நிற்பதற்குள் சிந்தனைகளாய் வந்து கொண்டேயிருந்தன.''

''இன்னிக்கு என்ன புதிய அனுபவம்?''

''இன்னிக்கு மாத்திரமா? தினம் விடிகிற மாதிரிதான் இன்றைக்கும் எனக்குப் பொழுது விடிஞ்சது.''

இலகா மறுபடியும் சிரிக்க முயன்றாள். ஆனால் தோற்றுப் போனாள்.

''சிந்தனை மனித ஜாதியின் சிறப்பு என்கிறார்கள். ஆனால் சமயங்களில், தனிப்பட்டவர்களுக்கு அதுவே பலஹீனம்; தோல்வியாய் முடிகிறது.''

'' உங்களால் இப்போது பிரச்னையைப் பேச முடியவில்லை, வறட்சியான தத்துவங்களைப் பேசிப் பார்க்கிறீர்கள்.''

இலகாவுக்குச் சுரீர் என்றது. அவளது உள் மனம் அந்த வினாடியில் தன்னிடம் ஏதோ குறை இருப்பதாய் உணர்ந்தது. குறையா, பலஹீனமா? வாழ்வில் அவள் எதிர்பார்த்துக் கிட்டாமல் போனதுதான் அவளுடைய குறையா ? அந்தக் குறையை அவளால் தாங்கிச் சமாளித்துக் கொள்ள இயலாமல் போனதுதான் அவளுடைய பலஹீனமா ?

''உங்களோட நிலைமையை என்னால் புரிஞ்சுக்க முடிகிறது இலகா! ஆனால் உங்கள் மனசை, என்னால் புரிஞ்சுக்க முடியல்லே!''

''என் நிலைமைக்கு என்னால் இப்படித்தான் பேச முடியும். அதை உங்களால் புரிந்து கொள்ள முடியாதது உங்கள் குறையில்லை. உங்களுக்குப் புரிகிற மாதிரி பேச முடியாதது என்னோட குறைதான். என் மனசில் இருக்கிறதைச் சொல்லித் தீர்க்க இந்த உலகில் வேறு யாரும் இல்லை !''

''உங்கள் பேச்சைக் கேட்க நான் தயாராய் இருக்கிறேன். அதனாலே உங்களுக்குக் கொஞ்சம் ஆறுதல் கிடைக்கிறதென்றால் எனக்கும் அதிலே அக்கறை உண்டு. என் பேச்சு உங்களை மனசுக்குள் கஷ்டப்படுத்தி விட்டதோ என்று நான் தயங்கினேன்.''

'' உண்மையைச் சொல்கிறேன், சேது ! உங்களோடு தினம் இரண்டு வார்த்தைகள் பேசிவிட்டுப் போகிறதில் எனக்குக் கொஞ்சம் ஆறுதலாய் இருக்கிறது. இல்லாவிட்டால் ஊமையாய் அழுது நான் எனக்குள் உருக்குலைந்து போய்க் கொண்டிருப்பேன்.''

''சரி, சொல்லுங்கள் ! இன்று ஏன் இப்படி ஒரு தடுமாற்றம் ?''

''மனைவியின் கடமை என்ன? குடும்பம் நடத்தணும் - வீட்டுக்காரன் கொண்டு போடுவதை வைத்துக் கொண்டு. ஆனால் என்னோட நிலைமை தலைகீழாய் இருக்கு. வீட்டிலே அவர் ஆறு மாதங்களாய்ப் படுக்கையில் கிடக்கிறார். நான் வேலை பார்க்கிறேன் ; அதோடு குடும்பத்தையும் நடத்திக் கொண்டு வருகிறேன். நான் சம்பாதிக்கிறவள்; என் தயவிலேதான் எல்லாம் நடக்கிறது என்று நான் நினைக்கிறேனாம். சாயங்காலம் வீடு திரும்பினால் ஒரு களைப்பு — உடம்பு ஓர் அசதியிலே ஒய்ந்து போகிறது. என்னையும் மீறி நான் சில நாட்கள் தளர்ந்து உட்கார்ந்துவிடுகிறேன். ஆனால், போனதும் அவரைக் கவனிக்காமல் இல்லை. மருந்து கொடுக்கிறேன்; ஆகாரம் கொடுக்கிறேன். அப்புறம் தனியாய்க் கொஞ்ச நேரம் எனக்குத் தேவைப்படுகிறது. ஆனால் — அவர் சொல்கிறார் — அவரோடு பேசப் பிடிக்காமல்தான் நான் அப்படி ஒதுங்கிப் போகிறேனாம்.''

''இலகா ! நோய் நீடித்துக் கொண்டே போனால் அது உடம்போடு மனசையும் பிடித்துக் கொண்டு விடுகிறது !''



''அதற்காக என் மனசைப் போட்டு இப்படித் துளைத்து எடுக்க வேண்டாம்.''

''இது ஒரு கஷ்டமான நிலைமைதான். ஆனால், தாங்கிக் கொண்டுதான் ஆக வேண்டும். காலப் போக்கில் நிலைமை மாறுகிற வரையில்.''

''மாறுகிற வரையில்!'' - இலகாவுக்கு இப்பொழுது தானாகவே சிரிப்பு வந்தது. வெறும் வறட்சியான — யாதொரு உணர்ச்சியையும் காட்டாத — சிரிப்பு.

''மாறுது சேது ! விபத்து அவரை நிரந்தர நோயாளியாக்கிவிட்டது. அதனால் மாறுதலுக்கே இடமில்லை. அவர் உயிர் தப்பியதைப் பெரிய காரியமாக அப்போது நினைத்தேன். ஆனால் அந்த விபத்து அவருடைய உள்ளத்தை - மனிதத் தனத்தை - முழுதும் அழித்து விட்டது.''

வீட்டுக்குள் நுழையும் போதே நேரமாகி விட்டதை அவள் உணர்ந்தாள். முன் அறை இருண்டு கிடந்தது. அதில்தான் கேசவனின் படுக்கை. விளக்கைப் போட்டாள். அவனிடம் எந்த அசைவும் இல்லை. முகம் சுவர்ப்புறம் திரும்பி யிருந்தது. தூங்குகிறான் என்று நினைத்துக் கொண்டு ஓசை எழுப்பாமல் வாங்கி வந்த பொருள்களை மேஜையின் மேல் வைத்தாள். திரும்பி வாயிற்படியைக் கடக்கும் நேரம்.

''இலகா! பார்க்காமலே போகிறாயே?''

''தூங்கறீங்கன்னு நினைச்சேன்.''

'' ஓ !''

''மாத்திரை தரட்டுமா ?''

பதிலே சொல்லாமல் அவளையே பார்த்தான் கேசவன். அதிலிருந்த, பார்க்கப்படுகிறவரின் மனத்தைக் கருங்க வைக்கும் உணர்ச்சி.

''இதோ வந்துட்டேன். இருங்க. முகம் கழுவி, சுடுநீர் போட்டு வைச்சுட்டு வரேன்.''

''போ! என்னோடே பேச உனக்குப் பிடிக்குமா ? போ... போ.....''

''பிடிக்குமா பிடிக்காதா என்பதை அப்புறம் பார்த்துக்கலாம். முதல்லே உங்களுக்குச் சூடா ஆகாரம் தயாரிச்சுக் கொண்டு வரேன். சாப்பிடுங்க. அப்பாலே பேசுவோமே!''

மௌனம்.

ஆனால் இந்த மௌனம் அனுமதியின் அடையாளமில்லை: அமைதியின் வெளித்தோற்றமுமல்ல.

இலகா சமையலறைக்குச் சென்றாள்.

அவனுடைய இரவு ஆகாரம் முடித்தது. பிறகு, 'என்னோடு பேச உனக்கு விருப்பமில்லை' என்று அவன் சொல்லும் குறையை ஒரு நியாயமான — தீர்த்து வைக்க வேண்டிய— தேவையாய் எண்ணி ஏற்றுக் கொண்டாள். அதற்காகத் தன் உள்ளத்தில் மிதந்து வந்த சலிப்பை ஒதுக்கித் தள்ளிவிட்டு, அங்கே அப்பொழுது அமைதியாய்க் காத்திருந்தாள்.

''உங்களோடே நான் ஏதோ பேசணும் என்று சொன்னீங்களே?''

''அது என்னோடே இஷ்டமா? நீயே வேண்டாம்னு தீர்மானிச்சுட்டே! அப்புறம் நான் என்ன சொல்ல முடியும்?''

''வெறும் கற்பனை; ஊகம் எல்லாம் வேண்டாம். நான் எப்போதாவது அப்படிச் சொன்னேனா ?''

''சொல்லித்தான் எல்லாம் தெரியணுமா? சில விஷயங்களைச் சொல்லாமலே தெரிஞ்சுக்கலாம். இது நீ சொல்லாமலே எனக்குத் தெரிவித்த விஷயம். ஏன் வீணாய் உன் நேரத்தைச் செலவழிக்கிறாய்? போ, போய் இதையெல்லாம் — நான் ஒருத்தன் இருக்கிறேன் என்கிறதையே மறந்து நிம்மதியாய் இரு.''

அவன் சட்டென்று முகத்தைத் திருப்பிக் கொண்டான். இலகா அப்படியே நாற்காலியோடு தேங்கி அசைவற்றுப் போனாள்.

''இதோ பாருங்கள்!'' என்று மீண்டும் அவளே பேச்சைத் தொடங்கினாள். ''என் மேல் கோபித்துக் கொள்ள உங்களுக்கு எத்தனையோ காரணங்கள் இருக்கலாம். ஆனால் என் மீது அனுதாபங் காட்ட ஒரு காரணம் கூட இல்லாமல் போய்விட்டதா ?''

''அனுதாபமா ? அது எனக்குத்தான் இப்போ தேவை. ஆனால் அது இனிமேல் எனக்குக் கிடைக்காது. என் மேல் அனுதாபம் காட்ட யாரும் இல்லை.''

''உடலுக்கு நோய் வரலாம். ஆனால் மனசை இந்த மாதிரி ஓர் எண்ணம் பிடித்துக் கொள்ளக் கூடாது.''

இலகா எழுந்து விட்டாள்.

அவன் அப்புறம் என்ன சொன்னான் என்று அவள் கேட்டுக் கொண்டிருக்கவில்லை.

இலகாவுக்குத் தலைவலி வந்து விட்டது. அவள் தன் மாடி அறைக்குள் சென்று வெகு நேரம் வரை அசையாமல், மேலே எந்த நினைவையும் தொடரும் ஆசையோ, துணிவோ இல்லாமல் உட்கார்ந்து விட்டாள். மறுபடியும் கீழே இறங்கி வந்தபோது அறையின் மங்கலான விளக்கொளியில் கட்டிலின் கீழே ஏதோ விழுந்து கிடப்பது தெரிந்தது. அருகில் சென்று பார்த்தாள். அவளுடைய சின்னக் கைப் பை! அது எப்படி அங்கே போயிற்று? அவன்தான் அதை எடுத்துக் குடைந்து பார்த்திருக்க வேண்டும்.

'எதற்காக?'

அதற்குள் பகல் காட்சியின் இரண்டு பாதி டிக்கெட்டுக்களைத் தேடியிருப்பானோ ? அப்படி ஏதாவது அகப்பட்டிருந்தால், அதை வைத்துக் கொண்டு அவளைப் பேசித் தீர்த்து விடும் மன வெறியா ?

மறுநாள் வழக்கம்போல் மாலையில் கையில் சாமான்களின் சுமையோடு அவள் வந்தாள். வழக்கம் போல் முன் அறையில் அவனுடைய படுக்கையை நோக்கித்தான் அவளது முதல் பார்வை சென்றது. ஆனால் அதில் அவன் இல்லை.

வீடு முழுவதும் தேடினாள்.

குழப்பத்தோடு — இனிமேல் என்ன செய்வது என்று புரியாத வெற்று மனத்தோடு இலகா மாடியறைக்குச் சென்றாள். காலையில் பூட்டிவிட்டுப் போன அறையின் கதவுகள் திறந்து கிடந்தன.

அறை நடுவில் அவன் கிடந்தான். சுற்றிலும் காகிதங்கள், பட்டியல்கள் ரூபாய் நோட்டுக்கள். எல்லாம் சிதறிக் கிடந்தன. மயக்கத்தில் மூச்சு மட்டும் 'புசு புசு' வென்று இழுக்கும் ஒலி கேட்டது.

அவன் எப்படி, ஏன் இங்கே வந்தான் ? அவள் கைப் பையைத் திறந்து ஒருவித ஆத்

கண்டதுமில்லை, காணப்போவதுமில்லை — இத்தகைய

# வெண்மை

சோப்பைவிட
1½ மடங்கு அதிக
துணிகளை சலவை
செய்கிறது.

பாதி உழைப்பிலேயே
மென்னீரிலும், எளிதில் நுரை
விடாத நீரிலும், சோப்பைவிட
இரட்டிப்பு பலனளிக்கிறது.




# டெட் கட்டி

டெட்டின் மற்றொரு தரமான தயாரிப்பு: புதிய முச்செயல் புரியும் டெட் பவுடர்—

வெண்மையானாலும் நீலமானாலும்: துணிகளை அதிக வெண்மையாக சலவை செய்கிறது.
வண்ணத் துணிகளை அதிக பிரகாசமாக சலவை செய்கிறது. துணிகளுக்கும்
கைகளுக்கும் அதிக பாதுகாப்பு தருகிறது.

Shilpi HPMA-38a/72 Tam



# குற்றம் குற்றமே!

பிரிட்டிஷ் அமைச்சர்களில் ஒருவரான அந்தோனி ராயல் குறிப்பிட்ட வேகத்திற்குமேல் தமது காரை ஓட்டிச் சென்றதற்காக அவருக்கு ரூ. 450 சமீபத்தில் அபராதம் விதிக்கப்பட்டது! இது நடந்தது பிரிட்டனில்! ஆனால் இங்கு...? மந்திரியின் காரை எந்த போலீஸ்காரராவது நிறுத்த முடியுமா...? மந்திரி என்ன? 'வட்ட'ங்களின் காரைக்கூட நிறுத்த முடியவில்லையே!

— சம்பத் குமாரி

திறந்தோடு சாவிக் கொத்தை எடுத்துப் பார்த்தாள். அவனுடைய அறைக் கதவின் இரட்டைச் சாவிகளும் அதில்தான் கோத்திருந்தன. இப்பொழுது அதில் ஒரு சாவி மட்டும்தான் இருந்தது.

பனிச்சென்று ஒரு பொறியாய் நெஞ்சுக்குள் விழுந்த விளக்கத்தில் பந்து பந்தாய் எண்ணங்கள், மனத் தவிப்புக்கள், ஏமாற்றங்கள், வெறுப்புக்கள் வந்து அடைத்தன.

அவன் சோதித்திருக்கிறான். தனக்கு மீண்ட நடக்கும் சக்தியை உபயோகப்படுத்தி எப்படியோ மாடிப் படிகளைக் கடந்து வந்து சோதனை செய்து பார்த்திருக்கிறான்; அவளுடைய அறையை அல்லது அவளையே!

ஆனால் மிக மோசமான ஓர் எண்ணத்தில், தன்னையே அவன் முட்டாள்தனமாய்ச் சோதித்துக் கொண்டு விட்டான் என்பது இலகாவுக்குப் புரிந்தது.

அவள் கீழே இறங்கிப் போய் அடுத்த வீட்டுப் பையனைக் கூப்பிட்டு டாக்டருக்குச் சொல்லி அனுப்பினாள். பிறகு மறுபடியும் மேலே வந்து அவன் அருகில் உட்கார்ந்து கொண்டாள்.

டாக்டர் வருவதற்குள் அந்த அறையின் அலங்கோலத்தைச் சீர்செய்து வைப்பது நல்லது என்று நினைத்தாள் இலகா. ஆனால் அது நினைவாகவே நின்று போயிற்று. அவளால் அப்பொழுது எதுவுமே செய்ய முடியவில்லை. டாக்டர் வந்தார். அவராலும் எதுவும் செய்ய முடியாது என்பதை அவனது உடலைச் சோதித்து விட்டு நிமிர்ந்த அவருடைய பார்வையே சொல்லி விட்டது.

அடுத்த சந்திப்பு — ஒரு மாத இடைவெளிக்குப் பின் — அந்த ஹோட்டல் வாயிலில் நிகழ்ந்தபோது சேது, ''இலகா!'' என்று மெதுவாய் அழைத்துவிட்டு நின்றான். அவள் தன் ஒரு கைச் சுமையை மற்றதில் மாற்றிக் கொண்டாள்.

''இப்படிக் கொடுங்கள்'' என்று கை நீட்டினான் அவன்.

இலகா கொடுத்துவிட்டு விரல்களைப் பிடித்துவிட்டுக் கொண்டாள். 'மறுபடியும் தொடங்கியாகி விட்டது' என்று சொல்லிக் கொண்டாள் தனக்குள்.

இருவரும் உள்ளே நுழைந்து அந்தப் பழைய வாடிக்கையான இடத்தில் உட்கார்ந்து காப்பி கொண்டு வரச் சொன்னார்கள்.

''ஒரு மாதமாய் எப்படித் தனியாய்ப் பொழுது போயிற்று? இலகா! நீங்கள் அதை மறந்துவிட முயல வேண்டும். உணர்ச்சிகளைத் தீவிரமாய் எடுத்துக் கொள்ளாமல்—''

''உணர்ச்சிகளா?'' என்று அவள் வறட்சியோடு சிரித்துக் கொண்டே கேட்டாள்.

''ஏன்?''

''அனுதாபமே இல்லாமல் நடந்து கொண்டு, அவைகளை ஒட்டத் துடைத்து விட்டுப் போய் விட்டார்.''

''ஆனால் அதற்காக நீங்கள் இனிமேலும் அப்படியே இருக்க வேண்டாம். நான் உண்மையாய், நேர்மையாய் உங்களிடம் இந்த விஷயத்திலும் அக்கறை கொண்டவன் என்பதால், சொல்லுகிறேன். இலகா! நீங்கள் சம்மதித்தால்....?''

பேச்சற்ற இடைவெளி திடீரெனத் தோன்றி வியாபித்தது. இலகா காப்பியை மெதுவாய்க் குடித்துக் கொண்டே சிந்தித்தாள். அவன் என்ன சொல்ல வருகிறான் என்பது அவளுக்குப் புரிந்தது. கடைசியில் வெற்றுப் பாத்திரத்தை மேஜையின் மேல் வைத்துவிட்டு, ''அவர் ஏன் அப்படித் திடீரென்று இறந்து போனார் என்பதை நீங்கள் கேட்கவே இல்லையே?'' என்று கேட்டுவிட்டுத் இலகா தொடர்ந்தாள்: ''தாழ்வு மனப்பான்மை! அதுதான் அவரைக் கொண்டு போய் விட்டது.''

''என்ன?'' என்றான் சேது அதிர்வு மிகுந்த குரலில்.

''ஆமாம்! கடைசியில் அவர் என் அறையைச் சோதனை போட்டுப் பார்த்திருக்கிறார்.''

'அப்புறம்?' என்று உதடு வரையில் வந்த கேள்வியைச் சேது அடக்கிக் கொண்டுவிட்டான், அவசரமாய். அவளுடைய அந்தரங்க வேதனையை வெளிக் கொண்டு வரவேண்டாம் என்ற நினைப்போடு.

இருவரும் சாலையோடு நடந்தார்கள்.

''சேது! உங்கள் நல்ல மனம் எனக்குப் புரிகிறது. தயவுசெய்து என்னையும் நீங்கள் புரிந்து கொள்ளுங்கள். இப்பொழுது உங்களோடு பேசுவதில் — உங்களிடம் நான் அனுதாப வார்த்தைகளைக் கேட்பதில் — நான் கொஞ்சம் நிம்மதியடைகிறேன். எனக்குத் தைரியமாக இருக்கிறது. ஆனால் இதற்குமேல் உங்கள் வாழ்க்கையில் ஒரு பிடிப்பையும், உரிமையையும் எனக்கு நீங்கள் கொடுத்தால், எனக்கும் ஒருநாள் தாழ்வு மனப்பான்மை வந்து விடலாம்.''

நெட்டுயிர்ப்புடன் இலகா நடையைத் தொடர்ந்தாள்.

பஸ் நிற்குமிடம் வந்தது.

சேது பையை நீட்டினான்.

அவள் வாங்கிக் கொண்டாள். இரண்டு கைகளாலும் மாற்றி மாற்றிச் சுமந்து கொண்டு பஸ்ஸுக்காகக் காத்திருக்கத் தொடங்கினாள் இலகா.

படுசுட்டியான குடும்பம்!
எல்லோரும் என்னுடை
ஜான்ஸன்ஸ்* எப்பவும்
உபயோகிக்கிறாங்க!




குழந்தைகளுக்கு உகந்தது.
உங்களுக்கும் சிறந்தது.



*ட்ரேட் மார்க்

JJ-3976

## அன்றும் இன்றும் சிலருக்கு அதே இளந்தளிர் மேனி!




பியர்ஸ் — அசல் கிளிசரின் சோப்

## பியர்ஸ் சருமக் களை ... கன்னிப் பருவக் களை

இப்போது அழகுகளின அட்டைப் பெட்டியிலே கிடைக்கிறது
சென்னை நகரிலும், திருவனந்தபுரத்திலும், கோழிக்கோட்டிலும் மட்டுமே.

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு

லின்டாஸ்- PS. 31 CP - 140 TM.

# சத்திய வெள்ளம்

### நா. பார்த்தசாரதி



## இருபத்திரண்டாவது அத்தியாயம்

கிராமத்தில் நாட்கள் மெல்ல மெல்ல நகர்ந்தன. ஒவ்வொரு நாளும் ஒரு வாரத்தின் சுமையோடும் கனத்தோடும் முக்கி முனகிக் கொண்டு ஊர்வதுபோல் இருந்தது. வேறு வேறு கல்லூரிகளிலிருந்து விடுமுறைக்காக ஊர் வந்திருந்த மாணவர்களோடு ஒரு நாள் இரவு சைக்கிள் சவாரி செய்து விருதுநகருக்குப் போய் இரவு இரண்டாவது காட்சி திரைப் படம் பார்த்து விட்டு வந்தான் பாண்டியன். வாடகை சைக்கிள்களை எடுத்துக் கொண்டு ஏழெட்டுப் பேர் சேர்ந்து போய்விட்டுச் சிரித்துப் பேசிக் கொண்டே இரவில் சேர்ந்து திரும்பியது உற்சாகமான அநுபவமாக இருந்தது. பல்கலைக் கழக மாணவர் பேரவைத் தேர்தலை ஒட்டி நடந்திருந்த நிகழ்ச்சிகளும், சிறை சென்று மீண்டதும் பல பத்திரிகைகளில் வந்திருந்த காரணத்தால் எங்கே படிக்கிற மாணவர்களாயிருந்தாலும் மாணவர்களிடையே அவனுக்கு ஒரு மதிப்பையும் புகழையும் உண்டாக்கியிருந்தன. பல்கலைக் கழக மாணவர் பேரவைத் தேர்தலில் அவன் எந்த ஒரு குறிப்பிட்ட கட்சிச் சார்புடைய மாணவர்களை எதிர்த்து வென்றிருந்தானோ, அந்தக் கட்சிச் சார்புடையவர்களாக இருந்த ஓரிருவர் அவனை வெறுக்கவும் செய்தனர். ஆனால் அந்த வெறுப்பு மிக மிகச் சிறுபான்மையாகவே இருந்தது. அழகுமுத்துவைப் போல் இன்னும் அடுக்குமொழிப் பேச்சு யுகத்திலேயே இருந்த ஓரிருவர் அப்படி வெறுத்தாலும் ஒரு பெரிய பல்கலைக் கழகப் பேரவையின் செயலாளனாயிற்றே என்று அவனை நோக்கி வியக்கும் வியப்பையும் அந்த ஓரிருவரால் தவிர்க்க முடியவில்லை. மல்லிகைப்பந்தலில் இருந்தாலும், மதுரைக்கு வந்தாலும், பாலவநத்தத்துக்குள் நுழைந்தாலும் மாணவர் இயக்கத்தில் ஈடுபட்டதன் காரணமாகத் தனக்கு ஏற்பட்டிருக்கும் புதிய மதிப்பையும், பெருமையையும் பாண்டியனை உணர முடிந்தது; புரிந்து கொள்ள முடிந்தது. அவன் கிராமத்துக்கு வந்த இரண்டாம் நாளோ, மூன்றும் நாளோ அருப்புக்கோட்டையிலிருந்த உயர்நிலைப் பள்ளித் தலைமையாசிரியர் ஒருவர் பள்ளி இலக்கிய மன்ற விழாவுக்காக அவனைப் பேச வருமாறு கூப்பிட்டார்.

''வேறே யாராவது பெரிய தலைவராப் பார்த்துக் கூப்பிடுங்க. நான் எதுக்கு?'' என்று பாண்டியன் பணிவாக மறுத்தான்.

''உபசார வார்த்தையா நீ இப்படிப் பேசக் கூடாது தம்பி! இனிமே உன்னைப் போல இருக்கிற இளைஞர்கள்தான் தலைவர்களாக வரணும். வயசானவங்க எல்லாம் 'போர'டிக்கிறாங்க. சொன்னதையே திரும்பத் திரும்பச் சொல்லிக்கிட்டிருக்காங்க. என்ன பேசறோம்னு தங்களுக்கும் புரியாமே கேட்கிறவங்களுக்கும் புரியாமே மணிக்கணக்காப் பேசறாங்க...'' என்று பதில் சொல்லிச் சிரித்தார் அந்தத் தலைமை ஆசிரியர். பாண்டியன் அவர் கூறியதை அப்படியே ஒப்புக் கொள்ளவில்லை.

''நீங்க சொல்றதை அப்படியே ஒப்புக்கொண்டுவிட முடியாது! தங்களுக்கு வயதாகி மூப்பு வந்து விட்டாலும் நாட்டையும், நாட்டின் எதிர்காலத்தையும் நினைத்துக் கவலைப்படுகிற தங்களது பொறுப்பு உணர்ச்சியை இளமையாகவே வைத்துக் கொண்டிருக்கிற பெரியவர்கள் சிலரும் நம்மிடையே இருக்கிறார்கள். தாங்கள் இளமையாகவே இருந்தாலும் நாட்டைப் பற்றிக் கவலையே இல்லாமல் வெறும் ஃபாஷன்களின் காட்சிப் பொம்மைகள் போல் திரியும் இளைஞர்களும் இருக்கிறார்கள். 'டிஸ்கொதே' ரெஸ்டாரண்டுகளின் பொய் இருளைத் தேடி அலையும் பல இந்திய இளைஞர்களை எனக்குத் தெரியும். மூத்துத் தளர்ந்த பின்னும் இளமையாகச் சிந்திக்கும் சில வயதானவர்களும், இளமையாயிருக்கிறபோதே மூத்துத் தளர்ந்து விட்டாற்போல் கிழட்டுத்தனமாகச் சிந்திக்கும் இளைஞர்கள் சிலருமாக இங்கே கலந்திருக்கிறார்கள். இந்தக் கலப்பை நீங்கள் அருப்புக்கோட்டையிலோ, பாலவநத்தத்திலோ இருந்து

புரிந்து கொள்ள முடியாது. இன்னும் பரபரப்பான நகரங்களில் வந்து பார்த்தால்தான் இது புரியும்...''

அவன் எவ்வளவோ மறுத்தும் கேளாமல் இலக்கிய மன்றத்துக்குப் பேச வருமாறு வற்புறுத்தினார் அந்தத் தலைமை ஆசிரியர். அவனும் போய்ப் பேசிவிட்டு வந்தான். அன்றைய தினம் அவன் செய்த சொற்பொழிவை எல்லாருமே பாராட்டினார்கள். அவன் கிராமத்துக்கு வந்திருக்கும் மகிழ்ச்சியைக் கொண்டாடுவது போல் அவன் தாய் இன்று கேழ்வரகு அடை, நாளை காராச்சேவு, நாளன்றைக்கு முறுக்கு என்று வாய்க்கு ருசியாக அவனுக்குச் செய்து கொடுத்து உபசரித்துக் கொண்டிருந்தாள். அவன் வந்து சேர்ந்த முதல் நாளுக்குப் பின் அவன் தாயும் தங்கையும் வயல்காட்டு வேலைகளுக்குப் போவதை நிறுத்தி விட்டார்கள். தந்தை தாம் எப்போதும் போல் காலையில் போய் சூரியன் மலைவாயில் விழுகிற நேரத்துக்குத் திரும்பிக் கொண்டிருந்தார். நடுவில் ஒரு நாள் இரவு அவனோடு பேச நேரம் வாய்த்தபோது கிழக்கு வீட்டுச் சன்னாசித் தேவரையும் பக்கத்தில் வைத்துக் கொண்டு, ''படிக்கிறதைவிட முக்காவாசி நாளு ஜெயிலிலே இருக்கீங்கன்னு தேவரு பேப்பரைப் படிச்சிட்டுச் சொல்றாரே; அது மெய்தானா?'' என்று அவனைக் கேட்டார் தந்தை.

''நாங்க எந்தத் தப்பும் பண்ணலே, அதுக்காக ஜெயிலுக்குப் போகலே. பண்ணாத தப்புக்காக அவங்களா எங்களை ஜெயில்லே அடைச்சாங்க'' என்றான் பாண்டியன். அரசியல் ரீதியாக அவன் போக்குப் பிடிக்காத காரணத்தால் சன்னாசித் தேவர் தந்தையிடம் இல்லாததும் பொல்லாததுமாகக் கோள் சொல்லி வைத்திருப்பார் போலிருந்தது. அது புரிந்திருந்தும் பாண்டியன் சன்னாசித் தேவரோடு அதிகமாக விவாதிக்க விரும்பவில்லை. ஊரில் இருந்தபோது மதுரையிலிருந்தும், மல்லிகைப்பந்தலிலிருந்தும் அவனுக்குச் சில கடிதங்கள் வந்திருந்தன. பல்கலைக் கழகத்தைத் திறக்கும் நாளுக்கு ஒரு நாள் முன்னதாகவே புறப்பட்டு வரச் சொல்லிக் கதிரேசன் எழுதியிருந்தான். தான் கொடுத்திருந்த நவநீத கவியின் வசன கவிதைகளை அவன் படித்தாயிற்றா இல்லையா என்று விசாரித்துக் கண்ணுக்கினியாள் எழுதியிருந்தாள். திரும்பவும் மல்லிகைப் பந்தல் போவதற்கு முன் மதுரையில் இறங்கித் தம்மைப் பார்த்துவிட்டுப் போகுமாறு மணவாளன் எழுதிய கடிதத்தில் வேண்டியிருந்தார். அண்ணாச்சி சுகம் விசாரித்து ஒரு கார்டு போட்டிருந்தார்.

விடுமுறை அநேகமாக முடிந்துவிட்டது. சில நாட்கள் தங்கியதிலேயே சில மாதங்கள் கழித்து விட்டாற்போன்ற மனநிலையை அடைந்திருந்தான் அவன். புறப்படுவதற்கு முந்திய தினம் மாலையில் உலாவச் செல்லும்போது நவநீத கவியின் அந்த வசன கவிதைத் தொகுதியைக் கையில் எடுத்துக் கொண்டு சென்றிருந்த அவன் மிளகாய்த் தோட்டத்துக் கிணற்றடி வேப்ப மரத்தின் கீழ் அமர்ந்து அதைப் படிக்கத் தொடங்கினான். கிராமத்துக்கு வருகிற சமயங்களில் எப்போதுமே வீட்டில் அமர்ந்து படிப்பது அவன் பழக்கமில்லை. இந்தக் கிணற்றடிதான் படிப்பதற்கு அவன் தேர்ந்தெடுக்கும் இடம். படிப்பதற்கு ஏற்ற சூழ்நிலையும் அமைதியுமுள்ள இடமாக இந்தக் கிணற்றடி அவனுக்குப் பழக்கமாகியிருந்தது.



'வருங்காலக் காதலர்களுக்கு' என்ற அந்தக் கவிதைத் தொகுதியில் எல்லாமே காதல் கவிதைகளாக இருக்கும் என்று அவன் நினைத்திருந்தான். ஆனால் அப்படி இல்லை. 'வருங்காலத்தைக் காதலிப்பவர்களுக்கு'. — என்ற அர்த்தமும் தொனிக்கும்படி அந்தத் தலைப்பைச் சூட்டியிருப்பதாக நவநீதக் கவியே தமது முன்னுரையில் எழுதியிருந்தார். தொகுதியில் சேர்ந்திருந்த 'இளம் நம்பிக்கைகள்' என்ற கவிதை அவனுக்கு மிகவும் பிடித்திருந்தது.

இந்த நூற்றுண்டின் இந்திய இளைஞனே!
இப்போது நீ எந்த இடத்தில் நிற்கிறாய்?
ஆன்மீகத்துக்கும் விஞ்ஞானத்துக்கும்
நடுவிலா ?
அறியாமைக்கும் அறிவுக்கும் நடுவிலா ?
நேற்றைய அவநம்பிக்கைகளுக்கும்
இன்றைய சிரமங்களுக்கும் நடுவிலா ?
நீ நிற்கும் இடம் உனக்குப் புரிகிறதா ?
அவநம்பிக்கைகள்தான் உன் முன்னோர்
உனக்கு அளித்த பிதுரார்ஜிதங்களா ?
சிரமங்கள்தான் நீ உனக்கென்றே
தேடிக்கொண்ட புதுச் சொத்துக்களா ?
நீ நிற்கும் இடம் உனக்குப் புரிகிறதா ?
நடுவே நிற்பவர்கள் எப்போதுமே
விபத்துக்குள்ளாகிறார்கள்
நடுவில் நிற்காதே பின்னாலும் போகாதே
முன்னேறிவிடு ! முன்னால் வழிகள்
தெளிவாயுள்ளன.
நடுவில் நிற்காதே பின்னாலும் போகாதே
நீ நிற்குமிடம் உனக்குப் புரிகிறதா ?
நடுவில் நிற்பவர்கள் எப்போதுமே
விபத்துக்குள்ளாகிறார்கள்.
முன்னேறிவிடு ! முன்னால் வழிகள்
தெளிவாயுள்ளன...''

இந்தக் கவிதையை இரண்டு மூன்று முறை திரும்பத் திரும்பப் படித்தான் பாண்டியன். அவனுடைய இதயத்தின் குரல்களை யெல்லாம் எதிரொலிப்பது போலிருந்தது இது. பாரதிக்கும் பாரதிதாசனுக்கும் பிறகு இந்த நவநீத கவி ஒரு பெரிய உணர்ச்சி வாயிலைத் திறந்து விட்டிருப்பதுபோல் தோன்றியது அவனுக்கு. அந்தக் கரிசல் காடு முழுவதும் எதிரொலிக்கும்படி இந்தச் சொற்களை உரத்த குரலில் கூவ வேண்டும் போலிருந்தது. 'சாலை விதிகளைச் சரியாகப் புரிந்து கொள். — சாலைகளில் நடுவே நிற்கக் கூடாது' என்று கூறியுள்ள வரிகளின் மூலம் 'மிடில். ஆஃப் தி ரோட்' என்னும் வழவழா மனப்பான்மை மிக மிக நாசூக்காகக் கிண்டல் செய்யப்பட்டிருக்கும் நயத்தை அவன் எண்ணி எண்ணி இரசித்தான்.

அன்றிரவு ஊர்ச் சாவடியில் வேறு சில மாணவர்களோடு பேசிக் கொண்டிருக்கும்போது பாண்டியன் இந்த வசன கவிதையை அவர்களிடம் எடுத்துச் சொல்லிப் புகழ்ந்தான். எல்லாரும் அவனைப் போலவே அதை இரசித்தாலும் விருதுநகரில் படிக்கும் அழகமுத்து மட்டும் கிண்டல் செய்து விமரிசித்தான்.

''எதுகை இல்லை. மோனை இல்லை. அடி வரம்பு, சீர் வரம்பு எதுவுமே இல்லாமே இது எப்படிக் கவிதையாகும்?''



''எதுகை, மோனை, சீரு, தளை, அடி எல்லாம் சரியா யிருந்து உள்ளே சரக்கு எதுவுமில்லாமே நடைப் பிணம் போல வர்ர கவிதைகளை என்னான்னு சொல்றது? எங்கே நீதான் ஒரு நல்ல கவிதையைச் சொல்லேன் அழகமுத்து?'' என்று அவனோடு விவாதிக்கத் தொடங்கினான் மற்றொரு மாணவன்.

''சொல்றேன் கேளு. நானே சென்ற ஆண்டு எங்க கல்லூரி மேகஸின்லே எழுதின கவிதையைக் கேட்டால் நீங்க அசந்து போயிடுவீங்க'' என்று தொடங்கினான் அழகமுத்து.

''நாங்க அசந்து போறோமோ இல்லியோ நீ அசராமச் சொல்லிப்பாரு. அப்புறம் தெரியும்?'' என்றான் பாண்டியன். அழகமுத்து தன் கவிதையைச் சொல்ல ஆரம்பித்தான்.

'' பருவப் பாவைதன்
உருவக் கோவையில்
இருவித் திருவிச்
செருவினன் மனத்தை
செருவிய மனத்தை
தருவதோ தவிர்வதோ
அறிகிலன் யானுமே
உருகினன் பருகினன்.''

ஒரு தமிழ் எம். ஏ. மாணவன் உடனே ஆத்திரமாகக் கேட்டான்:

'' சும்மா அளக்காதே அப்பனே! 'முருகிற் சிவந்த கழுநீரும்'னு ஆரம்பமாகிற பழைய கலிங்கத்துப் பரணிப் பாட்டை இமிடேட் பண்ணி அதிலே 'பருவப் பாவை' என்று உன் கண்டுபிடிப்பையும் நுழைச்சு எழுதியிருக்கே! இதிலே என்ன புதுசா இருக்கு?''

''புதுசா என்ன இருக்கணும்? அதான் வரிக்கு வரி எதுகை மோனை எல்லாம் இருக்கே...?''

''அதெல்லாம் இருந்து என்ன பிரயோசனம்? கவிதையல்லவா முக்கியமா அதுக்குள்ளார இருக்கணும்? அது இல்லியே?''

''நம்ம அழகமுத்துவுக்கும் வேற சில ஆட்களுக்கும் இந்தப் 'பருவப் பாவை'ங்கிற தொடரையே 'டெலிகிராபிக் அட்ரஸா' — (தந்தி விலாசம்) கொடுத்திடலாம்... சில பேருங்க கையிலே ரொம்ப வருசமா இந்தப் 'பருவப் பாவை' சிக்கிக்கிட்டுப் படாத பாடு பட்டுக்கிட்டிருக்கா....''

''இத்தினி வருசத்துக்குப் பெறகும் அந்தப் பருவப் பாவை கிழவியாகாமே எப்பிடி ஒரே மாதிரி இன்னும் 'பருவப் பாவையா'கவே இருந்துக்கிட்டிருக்கான்னுதான் புரியலே...''

''அதைப் பேசினவங்க எழுதினவங்க எல்லாம் வயசாகிக் கிழவனாகி மூத்துப் போனப்புறமும் அந்த வார்த்தை இன்னும் அப்பிடியே இருக்கு! வேடிக்கைதான்...''

அழகமுத்து கோபித்துக் கொண்டு எழுந்திருந்து போய்விட்டான். எல்லா மாணவர்களும் சேர்ந்து கொண்டு தன்னைக் கிண்டல் செய்ததை அவனால் தாங்கிக் கொள்ள முடியவில்லை. இந்த விவாதம் நடந்த மறு நாள் காலை பாண்டியன் கிராமத்திலிருந்து பல்கலைக் கழகத்துக்குப் புறப்பட வேண்டியிருந்தது. இம்முறை அருப்புக்கோட்டை பஸ்ஸில் போய் மாறிப் போகாமல், விருதுநகர் போய் மதுரைக்கு இரயில் மூலம் போக நினைத்தான் அவன். அடுத்த விடுமுறைக்கு இவ்வளவு நாட்களை வீணாக்காமல் முன்கூட்டியே புறப்பட்டு வந்து விட வேண்டும் என்று அவன் தாயும் தங்கையும் வற்புறுத்திச் சொல்லி அனுப்பினார்கள். அவன் புறப்படும்போது தந்தை எங்கோ காட்டுக்குப் போயிருந்தார். அவருக்கு எப்போதும் வெள்ளாமை வேலைதான். பாசம், பிரியம் எல்லாமே இல்லா முரட்டு மனிதர் போலத் தோன்றினாலும் பாண்டியனிடம் அந்தரங்கமான பாசமும் பிரியமும் அவருக்கு உண்டு. மேற் படிப்புக்கு வெளியூர் போன பின் எந்த விடுமுறைக்கு ஊர் வந்து திரும்பும் எந்தத் தடவையிலும் அவன் புறப்படுகிற தினத்தன்று அவர் வீட்டில் இருந்து வழியனுப்ப நேர்ந்ததே இல்லை. ''ஐயா கிட்டச் சொல்லிடு ஆத்தா'' என்று அவருக்குமாகச் சேர்த்துத் தாயிடம் சொல்லிக் கொண்டு புறப்படுவதுதான் எப்போதும் அவன் வழக்கமாக இருந்து வந்திருக்கிறது.

அன்று பிற்பகல் விருதுநகருக்குப் பஸ்ஸில் போகும்போது அதே பஸ்ஸில் 'அழகமுத்து'வும் வருவதைப் பாதி தூரம் சென்ற பின்பே பாண்டியன் பார்த்தான். அழகமுத்து முகத்தை 'உம்'மென்று வைத்துக் கொண்டு பேசாமல் இருந்தான். அபிப்பிராய பேதத்தைக் கோபமாக மாற்றி விரோதமாக ஆக்கிக்கொள்கிற அளவு அவன் இன்னும் சிறுபிள்ளைத்தனமாகவே இருந்தது பாண்டியனுக்குப் புரிந்தது. மாலையில் விருதுநகர் போய்த் திருவனந்தபுரத்திலிருந்து சென்னை செல்லும் மெயிலில் மதுரை போய்ச் சேர்ந்தான் அவன். முதலில் மணவாளன் வீட்டுக்குச் சென்று பார்த்தபோது அவர் வீட்டில் இல்லை. இரவு ஒன்பது மணிக்குத்தான் அவரைப் பார்க்க முடியும் என்று தெரிந்தது. அதற்குள் சித்திரக்காரத் தெருவுக்குப் போய்க் கண்ணுக்கினியாளைச் சந்தித்துவிட்டுத் திரும்ப எண்ணி டவுன்ஹால் ரோடு வழியே போய்க் கொண்

சென்னை துறைமுக தலைமை இஞ்சினியர் U. R. பாலசுப்பிரமணியனின் குமாரி சௌ. வஸந்தாவுக்கும், சேலம் கண் டாக்டர் S. வாலீச்வரனின் குமாரர் சிரஞ்சீவி பாலசந்திரன் B.E., M.Sc. (டெபுடி இஞ்சினியர் பாரத் எலக்ட்ரானிக்ஸ்)க்கும் சென்னை ஹேமமாலினி கல்யாண மண்டபத்தில் 13-11-72 அன்று சிறப்பாகத் திருமணம் நடைபெற்றது.

வாழ்க மணமக்கள் !



டிருந்தபோது ஒரு படக் கடை வாயிலில் எதிர்பாராத விதமாகத் தமிழ்த் துறைத் தலைவர் டாக்டர் பொழில் வளவனாரையும் வார்டன் பண்புச் செழியனையும் பாண்டியன் சந்திக்க நேர்ந்தது. அப்போதுதான் பிரேம் செய்யப்பட்ட அமைச்சர் கரிய மாணிக்கத்தின் மிகப் பெரிய படம் ஒன்றை இருவரும் சுமக்க முடியாமல் தூக்கிச் சுமந்து ஒரு டாக்ஸியில் வைத்துக் கொண்டிருந்தார்கள். மிக அருகே பார்த்துவிட்டதனால், ''ஐயா வணக்கம். எப்ப வந்தீங்க?'' என்று தமிழ்த் துறைத் தலைவரை வணங்கினான் பாண்டியன். திடீரென்று பாண்டியனை அங்கே சந்திக்க நேர்வதை எதிர்பார்க்காத அவர்கள் அசடு வழியச் சிரித்தார்கள்.

''அமைச்சர் உருவப் படத்தைப் பட்டமளிப்பு விழா முடிந்த மறுநாளே தமிழ் டிபார்ட்மெண்ட் அறையிலே திறந்து வைக்கப் போகிறோம். இந்தப் படத்துக்காகத்தான் வந்தோம்'' என்று அவன் கேட்காமலே வந்த காரியத்தையும் சொன்னார் பொழில் வளவனார்.

அதற்கு எந்த மறுமொழியும் கூறாமல் தனக்குத் தானே சிரித்துக் கொண்டான் பாண்டியன். பல்கலைக் கழகத்தின் தமிழ்த் துறையைச் சேர்ந்த கூடத்தில் திரு. வி. க., மறைமலையடிகள், தமிழ்த் தாத்தா உ. வே. சா., பரிதிமாற் கலைஞர் போன்றவர்களின் படங்களும், பாரதியார், பாரதிதாசன் போன்றவர்களின் படங்களுமே இது வரை இருந்தன. இப்போது புது வழக்கமாக ஓர் அமைச்சரின் படத்தைத் திறப்பதற்காக இவர்கள் ஏன் அலைகிறார்கள் என்று சிந்திக்கத்தொடங்கினான் அவன். பொழில் வளவனாரின் காக்கை பிடிக்கும் குணமும், வாழ்ந்தாருக்கு மாரடிக்கும் தன்மையும் பல்கலைக் கழக எல்லையில் எல்லாருக்கும் தெரியும் என்றாலும் இப்போது அவர் செய்யத் துணிந்திருந்த காரியம் வெறுப்பூட்டக் கூடியதாக இருந்தது. இதைச் செய்வதற்காக மல்லிகைப் பந்தலிலிருந்து அவர்கள் புறப்பட்டு வந்திருப்பது சற்றே மிகையாகப்பட்டது. பொழில் வளவனார் அவனிடம் பேசினார்:

''என்ன தம்பி சிந்தனை? நீயும் உன்னைச் சேர்ந்தவர்களும் தலைமை ஏற்ற பின் பல்கலைக் கழக மாணவர்களிடையே தமிழுணர்வு குன்றிவிட்டது என்பதுதான் என் வருத்தம். சொல்லப்போனால் இதுபோல் படம் சட்டம் போட்டு எடுத்து வர முன்பெல்லாம் நாங்கள் வர மாட்டோம். எங்கள் கட்டளையை ஏற்று உங்களைப் போல் மாணவர்கள் வருவார்கள். என்ன செய்வது? இப்போது காலம் மாறிவிட்டது. நாங்களே வருவது தவிர வேறு வழி இல்லையே?''

''நீங்களாக அப்படியெல்லாம் சொல்லக் கூடாது ஐயா! தமிழ் உணர்வு மட்டும் போதும் என்பது உங்கள் கட்சி. தமிழுணர்வோடு நியாய உணர்வும் வேண்டும் என்பது மாணவர்களாகிய எங்கள் கட்சி. அது தவறா ஐயா?''

''தவறொன்றும் இல்லை! ஆனால் விரிவுரையாளர் மதன கோபாலை வெளியேற்ற நீங்கள் மேற்கொண்ட போராட்டம் எங்களுக்கு உடன்பாடில்லை. பிழை புரிவது மனித இயல்பு. அதைப் பெரிதுபடுத்தி ஒருவர் வாழ்வைக் கெடுத்துவிடக் கூடாது! வேலையிலிருந்து தூரத்தும்படி அவர் என்ன பெரிய தவறு செய்து விட்டார்?''



## சத்திய வெள்ளம்

மூத்துத் தளர்ந்த பின்னும் இளமையாகச் சிந்திக்கும் சில வயதானவர்களும், இளமையாயிருக்கிறபோதே மூத்துத் தளர்ந்து விட்டாற்போல் கிழட்டுத்தனமாகச் சிந்திக்கும் இளைஞர்கள் பலருமாக இங்கே கலந்திருக்கிறார்கள்.

''அதுதான் நீங்களே சொல்கிறீர்களே, ஐயா, 'ஒருவர் வாழ்வைக் கெடுத்துவிடக் கூடாது' என்று. பிழை புரிவது மனித இயல்பானால் அதைக் கண்டிப்பதும் மனித இயல்புதானே?''

''என்னவோ தம்பி, எனக்கு உங்கள் போக்கெல்லாம் பிடிக்கவில்லை. முன்பெல்லாம் துணைவேந்தருக்குக் கட்டுப்படாத மாணவர்கள் கூடத் தமிழ்த் துறைத் தலைவருக்குக் கட்டுப்படுவார்கள். இப்போது அந்தக் காலம் மாறிவிட்டது....''

''நாங்களாக மாறவில்லை. நீங்கள்தான் எங்களை அப்படி மாற்றியிருக்கிறீர்கள் ஐயா!'' — அவன் இவ்வாறு சுடச் சுட மறுமொழி கூறியதும் அவர் மேலே பேசுவதை நிறுத்திக் கொண்டு விட்டார். பெரிய வணக்கமாகப் போட்டுவிட்டு அவர்களைக் கடந்து மேலே நடந்தான் பாண்டியன்.

அவன் போய்ச் சேர்ந்தபோது வீட்டு வாயிலில் பூக்காரியிடம் பூ வாங்கிக் கொண்டிருந்தாள் கண்ணுக்கினியாள். பிச்சிப்பூ வாசனை கம்மென்று வந்து நாசியை நிறைத்தது. அவனைப் பார்த்ததும் அவள் வியப்போடு கேட்டாள்:

''அடேடே...... ஏது இப்பிடித் திடீர்னு....? ஒரு நாள் முன்னடியே வந்திருக்கீங்க?...நாளன்னிக்குக் காலையிலே தானே யூனிவர்ஸிடி திறக்கிறாங்க?''

''ஒரு நாள் முன்னாலேயே வரச் சொல்லிக் கதிரேசன் எழுதியிருக்கிறான். நான் நாளைக்குக் காலையிலேயே போறேன்....''

''வாங்க.. உட்காருங்க... அம்மா, நாயினா ரெண்டு பேருமே இல்லே. வெளியிலே போயிருக்காங்க... ஆடி வீதியிலே வாரியாரு கதை கேட்கப் போறோம்னு போனாங்க...''

''வாரியாருக்கு ரொம்ப நன்றிக் கடன் பட்டிருக்கேன்.''

''அப்படியானா உங்களை உள்ளார விடக் கூடாது.''

''பின்னே எப்படியானா உள்ளேவிடச் சம்மதிப்பேன்னு தெரிஞ்சா நல்லது.''

''வர்ரீங்களா, நாமும் வாரியார் கதைக்குப் போகலாம்?''

''நான் வரலே. எட்டரை மணிக்கு நான் மணவாளன் வீட்டுக்குப் புறப்பட்டாகணும். ஒன்பது மணிக்கு அவரை வீட்டிலே வந்து பார்க்கறதாச் சொல்லியிருக்கேன். காத்திருப்பாரு.''

''சும்மா விளையாட்டுக்குக் கேட்டேன். நான் ஒண்ணும் கதைக்குப் போகப் போறதில்லே...''

அவளையே இமையாமல் பார்த்தான் பாண்டியன். வாயிற்புறம் திரும்பிப் பார்த்து யாரும் வரவில்லை என்று உறுதியாகத் தெரிந்த பின் அவள் கையிலிருந்த பூவைப் பறித்துத் தானே அவள் கூந்தலில் சூட்ட முயன்றான் அவன். பூவை அவன் கைகளில் பறி கொடுத்து விட்டாலும் தான் அவன் பிடியில் சிக்காமல் சிரித்துக் கொண்டே உட்புறம் ஓடினாள் அவள். அவனும் விடவில்லை. அவன் துரத்த, அவள் ஓட, அந்த வீட்டின் உட் கூடத்தில் ஒரு சரஸமான ஓட்டப் பந்தயமே நடந்தது. முடிவில் கதவோரமாக அவளைப் பிடித்து நிறுத்திக் கதம்பமான இங்கித நறுமணங்கள் நிறைந்த அவள் கூந்தலை நாசியில் நுகர்ந்தபடி அந்தப் பூவைச் சூட்டினான் பாண்டியன்.

''திருப்திதானே? அகநானூற்றுக் காலத்துக் காதலன் போல் பூச்சூட்டியாச்சு. இல்லியா?....''

''இந்தக் காலத்துக் காதலன் மாதிரின்னு எப்பிடி நடந்துக்கணும்? எனக்குத் தெரியாது.... அதை நீதான் கொஞ்சம் சொல்லேன்.''

''தமிழ் வாரப் பத்திரிகைகளிலே தொடர் கதை படியுங்க, புரியும். இல்லாட்டி ரெண்டு சினிமாவாவது பார்த்திட்டு வாங்க...'' — அவள் சிரித்தாள். குரலில் கேலி நிறைந்திருந்தது.

''அப்பிடியா சேதி? புரியுது'' என்று அவளைத்தாவிப்பிடிக்கமுயன்றான்அவன்.

''இதிலேருந்து தமிழ்த் தொடர் கதைகளிலேயும், சினிமாவிலேயும் தாவறதும், பாயறதும்தான் இருக்குன்னு நிரூபிக்கிறீங்களாக்கும்?''

''மன்னிக்கணும்! நான் 'நியூவேவ்' கதைகள் படிக்கிறதில்லே....''

''அப்பமன்னு உட்காருங்க! ஒரு கதையும் படிக்க வேணும்! அந்த நவநீத கவியின் கவிதைத் தொகுதி படிச்சீங்களா, இல்லேயா?''

அவன் அந்தத் தொகுதியைப் படித்ததையும், அதிலிருந்த 'இளம் நம்பிக்கைகள்' என்ற கவிதையைப் புகழ்ந்து வியந்ததனால் கிராமத்தில் ஒரு மாணவனுக்கும் தனக்கும் வந்த விரோதத்தையும் அவளிடம் விவரித்தான்.

''அந்தக் கவிதையில் உள்ள 'தொனி நயமும்' தற்காலத் தன்மையும் இணையற்றவை. அவரைத் தவிர வேறு யாருக்கும் அப்படி எழுத வராது'' என்றான் அவன்.

'' 'நட்சத்திரங்களும் முழு நிலாவும்' தான் அந்தத் தொகுதியிலேயே உனக்குப் பிடிச்ச கவிதையின்னு நீ எனக்கு எழுதின கடிதத்திலே சொல்லி யிருந்தே. இல்லியா?''

''அதுக்குக் காரணம் உங்களுக்கும் அது பிடிக்கணும்கிறதுதான்! 'நட்சத்திரமும், முழு நிலாவும்' எனக்குப் பிடிச்சா உங்களுக்குப் பிடிக்காமப் போயிடுமா என்ன?''

''இப்பக்கூட வானத்திலே நட்சத்திரங்களும் சின்னப் பிறை நிலாவும் இருக்கு... வா மாடிக்குப் போகலாம்.''

''நீங்க ரொம்பத் தைரியக்காரர் தான்....''

''யூனிவர்ஸிடி எலெக்ஷன் அப்ப ஒத்துக்காததை இப்பவாவது ஒத்துக்கிறியே? அப்பிடி வா வழிக்கு.''

வாயிற்புறம் யாரோ நடந்து வருகிற செருப்புச் சத்தம் கேட்டது. கண்ணுக்கினியாள்தான் முதலில் எழுந்து போய்ப் பார்த்தாள். ''வாங்க வாங்க...'' என்று வருகிற யாரையோ' வரவேற்று விட்டு உட்புறமாகத் திரும்பி, ''மணவாளன் அண்ணன் வராரு...'' என்றாள் அவள். பாண்டியன் எழுந்து வந்து மணவாளனை எதிர்கொண்டான்; வரவேற்றான். (தொடரும்)



## டி. கே. டி.க்கு அறுபதாண்டு!

○ சென்னை இந்தியன் எக்ஸ்பிரஸ் காரியாலயத்தின் ஜெனரல் மானேஜர் திரு டி. கே. தியாகராஜன் அவர்களின் 61வது பிறந்த நாள்— சஷ்டியப்த பூர்த்தி — வெகு சிறப்பாக நவம்பர் 12ந் தேதி எக்ஸ்பிரஸ் எஸ்டேட்டில் நடைபெற்றது. தம்பதிகள் வாழ்க, பல்லாண்டு!

## மதுரை மீனாட்சிக்குக் கிரீடம்

□ மதுரை அன்னை மீனாட்சிக்கு 14 லட்ச ரூபாய்க்குப் புதிதாகச் செய்யப்பெற்ற வைரக்கிரீட திருமுடி சூட்டு விழா டிசம்பர் 11ம் தேதி நடைபெறுகிறது.

கிரீடத்தின் உயரம் 14½ அங்குலமும், அடிப்பாகத்தின் சுற்றளவு 20 அங்குலமுமாகும். அதிலுள்ள தங்கத்தின் எடை 3500 கிராம். 3345 வைரக் கற்களும் (393 காரட்), 4100 சிவப்புக் கற்களும் (600 காரட்), அதில் பதிக்கப் பெற்றுள்ளன. இது தவிர, திருக்கோயிலில் பன்னெடுங் காலமாக இருந்து வந்த 8½ காரட் எடையுள்ள, விலை மதிக்க முடியாத ஒரு மரகதக் கல்லும், அதே எடையுள்ள ஒரு மாணிக்கக் கல்லும் இந்தக் கிரீடத்தில் பொருத்தப்பட்டுள்ளன. திருக்கோயில் கருவூலத்திலிருந்த மரகதக் கல்லையும், மாணிக்கக் கல்லையும் வைரக் கிரீடத்துக்குப் பயன்படுத்திக் கொள்ள அன்புடன் அனுமதி அளித்த அறங்காவல் குழுவினர்க்கும், அறநிலைய ஆணையர் திரு கே. எஸ். நரசிம்மன் அவர்களுக்கும் திருப்பணிக் குழுவின் நன்றி உரித்தாகுக.

மேலும், தங்கமாகவும், மணிகளாகவும், பணமாகவும் நேரில் நன்கொடையாகக் கொடுத்தவர்களுக்கும், உண்டியல் மூலம் காணிக்கையாகச் செலுத்தியவர்களுக்கும், இப்பணி இனிது முடியப் பல வகையிலும் துணைபுரிந்த அனைவருக்கும் அருள்பாலிக்க வேண்டுமென்று அன்னை மீனாட்சியை வேண்டிக் கொள்கிறோம்.

இந்த விழாவை வருகிற டிசம்பர் மாதம் 10, 11 ஆகிய இரு தேதிகளில் கொண்டாடுவதற்கும், கிரீட வேலையைப் பூர்த்தி செய்வதற்கு ஆகும் செலவிற்கும் பணம் தேவைப்படுகிறது. இதற்காகப் பொதுமக்கள் வைரக் கிரீட உண்டியலில் தாராளமாகக் காணிக்கை செலுத்தும்படி கேட்டுக் கொள்கிறோம். நேரடியாகத் திருப்பணிக்குழு அலுவலகத்தில் பணம் கொடுத்தும் ரசீது பெற்றுக் கொள்ளலாம். பொருள் அனுப்பவேண்டிய முகவரி: பி. டி. ராஜன், தலைவர் திருப்பணிக் குழு, மதுரை.





## குழந்தைக் கவிஞருக்கு 50 வயதாமே?

□ குழந்தை எழுத்தாளர் சங்கத்தினர் நேருஜி பிறந்த நாள் விழாவையொட்டி ஏற்பாடு செய்திருந்த கூட்டத்தில் தமிழ்நாடு நூலக இயக்குனர் திரு வே. தில்லைநாயகம் கன்னிமாரா நூலகத்தின் அருகில் குழந்தைகளுக்கென ஒரு நூலகம் அமைக்கத் திட்டமிட்டுள்ளதாகக் குறிப்பிட்டார். துணைவேந்தர் இவ்விழாவில் 11 எழுத்தாளர்கள் எழுதி, 7 பதிப்பகத்தினர் பதிப்பித்த 12 குழந்தை நூல்களை வெளியிட்டார். சங்கம் நிகழ்த்திய போட்டிகளில் எ. நு. கணபதியின் கவிதைத் தொகுப்பும் (படம்) இ. க. கயிலைபெருமாள் எழுதிய சர் சி. வி. ராமனின் வாழ்க்கை வரலாறும் முதற் பரிசுகளாகத் தங்கப்பதக்கம் பெற்றன. ஏ. வி. எம். அறக்கட்டளையின் உதவியினால் வழங்கப்பெற்றன இப்பரிசுகள். சங்கத் தலைவர் அழ. வள்ளியப்பா இவ்விழாவுக்கு முதல் நாள் 50ம் வயதினை எட்டிப் பிடித்தார். குழந்தை உள்ளம் படைத்த குழந்தைக் கவிஞர் கடந்த காலத்தைத் திரும்பிப் பார்த்தால் நியாயமான பெருமைக்குரிய பல சாதனைகளைக் காணலாம்.

• 'பா'

# தீப்பிடித்த குடிசைகள்

**1929**-ம் வருஷத்தில் சட்டசபைத் தேர்தல்கள் இல்லை என்று இர்வின் மகாப் பிரபு நிர்மானித்துவிட்டதில் என்னைப் போல் வருத்தமடைந்தவர்கள் யாரும் இருக்கமுடியாதென்று நினைக்கிறேன். என் துக்கத்தின் காரணங்களைச் சொல்கிறேன், கேளுங்கள். (1) இந்த வருஷத்தில் தேர்தல் நடந்து நான் இந்திய சட்டசபைப் பதவிக்கு நின்றிருக்கும் பட்சத்தில், என் எதிரி யாராயிருப்பினும் அவர் தேர்தலுக்கு முதல் நாள் யமலோகத்துக்கு வோட்டுக் கேட்கப் போய் விடுவார் என்றும், நான் போட்டியின்றித் தேர்ந்தெடுக்கப்படுவேன் என்றும், ஜோசியர் சொல்லியிருந்தார். அது இல்லாமற் போயிற்று. (2) தேர்தல் விநோதங்களைப் பற்றிச் சிற்சில கட்டுரைகள் எழுதியிருக்கலாம். அதற்கும் இடமில்லை.

புதுத் தேர்தலைப் பற்றி எழுத இடமில்லையே என்று நினைத்துக் கொண்டிருந்தபோது பழைய தேர்தலில் நடந்த சம்பவம் ஒன்று ஞாபகத்துக்கு வந்தது. பல்லில்லாத கிழவன் பாலிய பருவத்தில் வெல்லச் சீடை தின்றதை எண்ணி சந்தோஷப்படுவது போல் அந்தப் பழைய தேர்தல் சம்பவத்தைப் பற்றியாவது எழுதலாமென்று நிர்மானித்தேன்.

1926ம் வருஷத்தில் சட்டசபைக்கு நடந்த பொதுத் தேர்தலில் பல அதிசயமான முடிவுகள் ஏற்பட்டன. வெற்றி நிச்சயம் என்று எண்ணியிருந்தவர்கள் பலர் தோல்வி அடைந்தார்கள். நம்பிக்கையெல்லாம் இழந்து சர்வநாடியும் ஒடுங்கிப் போயிருந்தவர் பலர், பெரும் வெற்றியடைந்தார்கள். இந்த அதிசயமான முடிவுகளுக்குள்ளே மிகவும் அதிசயமானது ஸ்ரீமான் காவிடி கோவிந்தப்பிள்ளையின் வெற்றியேயாகும். இவர் நமது ஜில்லாவில் முதன்மையாக வெற்றிபெறுவார் என்று அரசியல் ஜோதிடத்தில் வல்ல பத்திரிகை நிருபர்கள்கூட எதிர்பார்க்கவில்லையென்றால் நீங்களும் நானும் மூக்கில் விரல் வைத்து ஆச்சரியம் அடைந்ததில் வியப்பில்லையன்றோ ?

ஆம்; இப்பொழுது நினைத்தாலும் அந்தக் காட்சி என் கண் முன்னே நிற்கின்றது. தேர்தல் முடிவுகள் பெருவாரியாக வெளியாகிக் கொண்டிருந்த அன்று, சென்னையில் தினசரிப் பத்திரிகாலயங்களின் வாயில்களில் கும்பல் கும்பலாய் ஜனங்கள் காத்துக் கொண்டிருந்தார்கள். வெற்றி பெற்றவர்களின் பெயர்கள் வர வர, வாசலில் ஒரு கறுப்புப் பலகையில் எழுதப்பட்டு வந்தன. பிரபல ஜஸ்டிஸ் கட்சித் தலைவர் ஒருவர் தோற்றுப் போனார் என்று தெரிந்ததும், காங்கிரஸ் அபிமானி ஒருவர் அவசரமாகப் பக்கத்துக் கடைக்குச் சென்று ஒரு டஜன் சுருட்டுக் கட்டுகள் வாங்கி வந்து எல்லாருக்கும் வழங்கினார். (யாராவது இறந்து போனால் புகையிலை வழங்குவது சென்னையில் வழக்கம்.) இந்த விநோதத்தை நான் பார்த்துக் கொண்டிருக்கையில்...ஜில்லா தேர்தல் முடிவுகள் கறுப்புப் பலகையில் எழுதப்பட்டன. வெற்றி பெற்ற மூவரில் ஸ்ரீமான் காவடி கோவிந்தப்பிள்ளை முதன்மையாக நின்றார். அவருக்கு அடுத்தபடியாக வந்தவருக்கும் அவருக்கும் 5000 வாக்கு வித்தியாசம்!

ஒரு துள்ளுத் துள்ளி மூன்று முழ உயரம் மேலெழும்பிக் குதித்தேன். உடனே



எனக்கு வெட்கமாய்ப் போய்விட்டது. சுற்று முற்றும் பார்த்தேன். மற்றவர்கள் என்னைவிட மோசம் என்று தெரிந்தபிறகுதான் கொஞ்சம் சமாதானமாயிற்று. என்னைப் போலவே ஆகாயத்தில் கிளம்பிய பலர் அப்போதுதான் தரையில் இறங்கினார்கள்! அவர்களில் ஒருவர் கீழே கிடந்த சுருட்டு நெருப்பில் காலை வைத்து விட்டு மறுபடியும் மேலெழும்புவதையும் கண்டேன். வேறு சிலரோ ஆச்சரியத்தினால் திகைத்துப் போய்ப் பிளந்த வாய் மூடாமல் நின்றார்கள். ஆனால் இப்படி ஆச்சரியப்பட்டவர்களில் எவரும் துக்கமோ, மகிழ்ச்சியோ காட்டவில்லை. ஏனெனில் ஸ்ரீமான் காவடிப் பிள்ளை காங்கிரஸ் கட்சியையோ ஜஸ்டிஸ் கட்சியையோ சேர்ந்தவரல்லர். சுயேச்சைவாதி.

அதுதான், சுவாமிகளே! இதில் பெரிய அதிசயம். ஸ்ரீமான் காவடி கோவிந்தப் பிள்ளை எந்தக் கட்சியையும் சேர்ந்தவரல்லர். அவரை ஆதரிக்கப் பத்திரிகைகள் இல்லை, பிரசாரகர்கள் இல்லை. அவர் பெரிய வக்கீல் அல்ல; ஜில்லா போர்டு தலைவர் அல்ல; பெரும் பணக்காரருமல்ல. அந்த ஜில்லாவுக்கு வெளியே அவர் பெயரை யாரும் கேட்டது கிடையாது. பின் எப்படி அவர் இம்மாதிரி ஒரேயடியாகத் தாண்டிக் குதித்தார்? இந்தக் கேள்விக்குப் பதில் சொல்லக்கூடியவர் சென்னைப் பட்டணத்தில் யாரும் இல்லை. கூளிப்பட்டி ஜமீந்தாரைப் பிடித்தால் ஒருவேளை இந்த மர்மம் விளங்கலாம் என்று நினைத்தேன்.



கூளிப்பட்டி ஜமீந்தாரைக் குறித்து நீங்கள் கேள்விப்பட்டிருக்கிறீர்கள் அல்லவா? அவர் எனது பழைய நண்பர். இது குறித்து நீங்கள் என் மீது பொறாமைப்பட வேண்டாம். மேலும் அது என்னுடைய தப்புமன்று; ரயில்காரனுடைய தவறு. நாங்கள் இருவரும் ஒரு தடவை ஒரே ரயில்வே ஸ்டேஷனில் ரயில் ஏறும்படி நேர்ந்தது. இல்லை, ரயில் ஏறாதிருக்க நேர்ந்தது. நாங்கள் கையில் மூட்டையை வைத்துக் கொண்டு தயாராய்க் காத்துக் கொண்டுதான் இருந்தோம். நான் நின்ற இடத்துக்கு நேரே இரண்டாம் வகுப்பு வண்டி வந்து நின்றது. அந்த மனிதருக்கு நேரே மூன்றாம் வகுப்பு ஸ்திரீகளின் வண்டி நின்றது. நான் மூன்றாம் வகுப்பையும் அவர் இரண்டாம் வகுப்பையும் தேடிக் கொண்டு போனோம். நான் என் வண்டியை விரைவில் கண்டுபிடித்து விட்டேன்.

''ஸார்! ஸார்! ஸார்! கதவைக் கொஞ்சம் திறவுங்கள்!'' என்றேன்.

''ஸார்! ஸார்! ஸார்! தயவுசெய்து கொஞ்சம் அடுத்த வண்டிக்குப் போங்கள்'' என்று உள்ளிருந்து பதில் வந்தது.

மீறி ஏறுவதற்கு முயன்றேன். உடனே என்னை நோக்கி ஒரு டஜன் கைகள் முன்வந்தன. எனவே, நான் பின்வாங்க வேண்டியதாயிற்று. இந்த மாதிரி இரண்டு வண்டி பரி



சோதிப்பதற்குள் ரயில் கிளம்பி விட்டது. கொஞ்ச தூரம் ரயிலுடன் நானும் ஓடினேன். பின்னர், சை! சை! இந்த ரயிலுக்கு நம்முடன் கூட ஓடும் சக்தி உண்டா என்று நிர்மானித்து நின்று விட்டேன். திரும்பிப் பார்த்தபோது கூனிப்பட்டி ஜமீந்தாரும் கையில் பெட்டியுடன் நின்று கொண்டிருந்தார். இரண்டாம் வகுப்பில் தம்பதி சமேதராய் எழுந்தருளியிருந்த ஒரு வெள்ளைக்காரன் அவரை, ''நரகத்துக்குப் போகும்படி'' ஆக்ஞாபித்ததாய் எனக்குப் பின்னால் தெரிய வந்தது. ரயில் போனதும் நாங்கள் இருவரும் சந்தித்தோம்.

'' இந்த ரயில் நாசமாய்ப் போனால் என்ன?'' என்று நான் கேட்டேன்.

'' ரயில் கம்பெனி பாதாள லோகத்துக்குப் போனாலென்ன?'' ' என்று ஜமீன்தார் திருப்பிக் கேட்டார்.

''கொஞ்சமும் ஆட்சேபமில்லை'' என்றேன்.

இவ்வாறுதான் நாங்கள் நண்பர்களானோம்.

# அஞ்சலி

சுந்தா

கல்கி நினைவு நாள் டிசம்பர் 5ம் தேதி

அமரர் கல்கியின் வாழ்க்கை வரலாற்றை எழுதும் நோக்கத்துடன் நான் ஆராய்ச்சி நடத்தத் தொடங்கி ஆறு மாதங்கள் ஆகின்றன. இன்னும் எவ்வளவோ தகவல்களைத் திரட்ட வேண்டியதாய் இருந்தபோதிலும், ஏற்கனவே அவருடைய வாழ்க்கைப் படத்தின் வெளிக் கோடுகளில் பலவும் உள்கோடுகளில் சிலவும் துலக்கமாகி உள்ளன. முழுமையான படம் அவருடைய சொல்லோவியம் ஒன்றுக்கு இணையாகச் சுவையுள்ளதாய் இருக்கும் என்பதில் ஐயமில்லை.

கல்கி என்ற புனைபெயருடன் புனைந்திட்ட கதைகள் பலவற்றில் மர்மம் உண்டு. ஆனால் இயற்பெயருடன் சிறுவனாய், இளைஞனாய், நடு வயதினராய் வாழ்ந்த கிருஷ்ணமூர்த்தியின் வாழ்க்கையில் மர்மம் ஏதும் கிடையாது. ஆயினும், மற்றக் கதையம்சங்களான, பொருத்தமான உடன் — நிகழ்ச்சிகள், சோதனைகள், விதியின் விளையாட்டுக்கள், எதிர்பாராத திருப்பங்கள் முதலியன உண்டு. கல்கியைப் போன்றோரின் வாழ்க்கையில் புறச் செயல்களைவிட மன நிகழ்ச்சிகளே முக்கியமானவை. ஆனால் அவற்றை ஊடுருவிப் பார்க்க இயலாதாகையால் ஊகிக்கத்தான் முடியும்.

உடல் வலிமை இல்லாச் சிறுவனாய் இருந்த கிருஷ்ணமூர்த்தி மன வலிமையைப் பெருக்கிக் கொண்டார். அகத் தோற்றத்தை அழகு படுத்திக் கொண்டு, வெளித் தோற்றத்தைச் சுற்றிப் புகழ் வட்டத்தைச் சுழலவிட்டார். பாலப் பருவத்தில் தந்தை வழியாயும் திண்ணைப் பள்ளிக்கூட ஆசிரியர் மூலமும் மனத்தில் பதித்துக் கொண்ட தெய்வ பக்தியை, இளமைப் பருவத்தில் தேசபக்தியாய் மாற்றிக் கொண்டார். பின்னர், தேசபக்தியைப் பிறருக்குப் புகட்டுவதற்காகப் பிரசார எழுத்தாளராய் உருக்கொண்டவர், போகப் போக அழகும் அற்புதமும் நிறைந்த கதைகளைப் படைக்கும் இலக்கியக் கலைஞராய்ப் பரிணமித்தார். நாட்டின் விடுதலைப் போராட்டங்களிலும் சீர்திருத்த இயக்கங்களிலும் செயல் வடிவில் அவர் பங்குகொண்டு, அதே சமயம், அவற்றுக்கு இலக்கிய வடிவம் கொடுத்தார். அவருடைய எழுத்துக்களையெல்லாம் ஒரு தொகுப்பாய்ப் படித்தால், அவர் காலத்து வரலாறு படலம் படலமாய் மனத் திரையில் மீண்டும் சுழன்றோடும். உடன் காலத்திலிருந்து பெயர்ந்து முன்காலத்தில் உலவி, சரித்திரச் செய்திகளுடன் கற்பனையைக் கலந்து அவர் ஆக்கி அளித்த நாவல்களைப் படித்தாலோ, பாரதியாரின் 'செந்தமிழ்நாடெனும் போதினிலே' எனத் தொடங்கும் பத்துப் பாடல்களின் வரிகளுக்கெல்லாம் நூறுவிதமான விரிவுரைகளையும் விளக்கச் சித்திரங்களையும் காணலாம்.

சிந்தனையின் பலனாய் அவர் எழுதிய கட்டுரைகளைப் படிக்கையில், அவருடைய புத்தி கூர்மையையும் அறிவுத் தெளிவையும் விஷய ஞானத்தையும் பாராட்டுகிறோம். ஆனால், அவருடைய சிறப்புப் படைப்புக்களான 'சிவகாமியின் சபதம்', 'அலையோசை' மாபெரும் படைப்பான 'பொன்னியின் செல்வன்' ஆகியவற்றில் வரும் சில நாடகக் காட்சிகளையும், உரையாடல்களையும், வர்ணனைகளையும், உணர்ச்சி அலைகளையும் பார்க்கும்போது வெறும் பாராட்டோடு நாம் நிற்பதில்லை. எப்படித்தான் அவற்றை அவர் கற்பனை செய்தாரோ என்று வியக்கவே செய்கிறோம். மனத் தத்துவத்தின் படி இதற்கு ஒருவிதமாய் விளக்கம் கூற முடியும். வேறு சில சிறந்த இலக்கியக் கலைஞர்களைப் போலவே கல்கியும், புலன்களால் நுகரும் அனுபவங்களை அடி மனத்தின் ஆழத்தில் தேக்கி வைத்துப் பல விதமாய் அவற்றைக் கலவைகளாக்கி, வேண்டும்போது அவற்றை வர்ணக் கனவுகளாய், ஜாலச் சொல் மணிகளாய் வெளிப்படுத்தும் அபூர்வ சக்தியைக் கொண்டிருந்தார். 'சோலைமலை இளவரசி' என்ற குறுநாவலில், கதாநாயகன் குமாரலிங்கம், முற்பிறவிக் காட்சிகளைக் கனவுத் தோற்றங்களாய்க் கண்டதாகக் கல்கி எழுதி இருக்கிறார் அல்லவா ? தம்மிடம் இருந்த சக்தியையே குமாரலிங்கம் கொண்டிருக்கச் செய்தார் என்று வைத்துக் கொள்ளலாம். குமாரலிங்கம் எண்ணுகிறான்: 'நாம் கண்ட காட்சி, அடைந்த அனுபவம் எல்லாம் தூக்கத்திலே கண்ட மாயக் கனவா? இல்லை, இல்லை, ஒரு நாளும் இல்லை. ஒவ்வொரு சம்பவமும், ஒவ்வொரு அனுபவமும், பிரத்தியட்சமாய்ப் பார்த்து அனுபவித்ததாக அல்

கூளிப்பட்டி ஜமீன்தார் மிக்க செல்வாக்குள்ளவர். அந்த ஜில்லாவில் 4000 வாக்குகள் அவர் கைக்குள் அடக்கம் என்று பலர் சொல்லக் கேட்டிருக்கிறேன். ஏழை எளியவர்களிடம் அவர் மிக்க கருணை உள்ளவர் என்பதும் பிரசித்தியான விஷயம். ஆனால் அவர் அரசியல் விஷயங்களில் மட்டும் தலையிட்டுக் கொள்வது கிடையாது. தலையை மட்டுமன்று; கால், கை, காது முதலிய எந்த அவயவத்தையுமே அவர் அரசியலில் இடுவது கிடையாது. சட்டசபை அபேக்ஷகர்களாக நின்ற ஒவ்வொருவரும் ஜமீன்தாரின் ஆதரவைப் பெறப் பிரயத்தனம் செய்தார்கள். எல்லாருக்கும், ''ஆகட்டும், பார்ப்போம்'' என்ற பதிலே அவர் சொல்லி வந்தார். ஆகவே இப்பொழுது காவடி கோவிந்தப்பிள்ளையின் மகத்தான வெற்றியைப் பற்றித் தெரிய வந்ததும், ஒருகால் நமது நண்பரின் கைவேலை இதில் இருக்குமோ என்று நான் சந்தேகித்தது இயல்பேயல்லவா ?

கூளிப்பட்டிக்குப் போனேன். ஆனால் ஏமாற்றம் அடைந்தேன். ஜமீன்தார்,

லவா தோன்றுகின்றன? அவ்வளவும் வெறும் கனவாகவோ, குழம்பிப் போன மூளையின் விசித்திரக் கற்பனையாகவோ இருக்க முடியுமா? அல்லது உண்மையிலேயே முன்னொரு பிறவியில் நம் வாழ்க்கை அனுபவங்கள்தான் அவ்வளவு தெளிவாக நினைவுக்கு வந்தனவா?'

'முன்பு விட்ட குறை வந்து தொட்டாச்சு' என்ற கவிதை வரியை, 'சிவகாமியின் சபதம்' நூலுக்கான முன்னுரையில் கல்கி எடுத்தாண்டு, ஒரு சக்தி வாய்ந்த மந்திரத்தைப் போல் தம்மை அந்த வரி மதிமயங்கச் செய்தது என்கிறார்: 'முந்தையப் பிறவிகளில் விட்ட குறைதான் இங்கே (மாமல்லபுரத்தில்) என்னைக் கொண்டு வந்து சேர்த்து, இன்று இந்தக் கடற்கரை ஓரத்திலே உட்காரச் செய்திருக்கிறது என்று தோன்றுகிறது.'

முன்பு விட்ட குறை வந்து தொட்டாற் போல் அரிய தொடர்புகள் பல கல்கிக்கு வாய்த்தன. உதாரணமாய், அவருடன் பால்ய நண்பர்களாய் இணைந்தவர்களில் இருவர், உயிர்த் தோழர்களாய் நிலைத்து, அவருடைய வாழ்க்கை நலத்துக்கும் மனச் செம்மைக்கும் உதவியாய் இருந்தார்கள். நவீன நிர்வாக ஆற்றல் கொண்ட வேறு இருவர், வெவ்வேறு காலங்களில் அவருக்குப் பக்கபலமாய் நின்று, இலக்கியப் படைப்பில் அவர் நிம்மதியாய் ஈடுபடுவதற்கு வகை செய்தார்கள். பேரறிஞரும், அரசியல் மேதாவியும், உத்தம குணசீலருமான தலைவர் ஒருவர் தமது அபிமானத்தைக் கல்கிக்கு அளித்தார்; அத்தலைவரின் நெறிகளையும் செயல்களையும் உலகுக்கு விளக்கிச் சொல்வதை, தமது வாழ்க்கையின் முக்கிய குறிக்கோளாகக் கல்கி கொண்டிருந்தார். தமிழ்க் கவிதையின் இதயத்தை நன்கு அறிந்த பேரன்பர் ஒருவர், தமது இதய பீடத்தில் அவரை ஏற்றிவைத்துக் கொண்டாடினார்.

இவர்களுக்கும் இன்னும் பலருக்கும் முன்னால், உடன்பிறப்பு உரிமையுடன் கல்கியைக் கொண்டாடியவர் அவருடைய அண்ணா வேங்கடராமய்யர். ஒரு சமயம் சிறுவன் கிருஷ்ணமூர்த்தி குளம் ஒன்றில் சறுக்கி விழுந்து மூழ்கிக் கொண்டிருந்தபோது, தமக்கு நீந்தத் தெரியாது என்பதையும் அண்ணன் மறந்து தம்பியைக் காப்பாற்றுவதற்காகத் தண்ணீரில் குதித்து அவனுடன் தானும் தத்தளித்தான். தம்பிக்காக உயிரையே விடத் துணிந்தவர் வேறு என்னதான் செய்ய மாட்டார் ? தம்பியின் ஒவ்வொரு செயலையும் பாராட்டினார்; ஒவ்வொரு மன மாற்றத்தையும் பரிவுடன் கண்டு அவன் போக்கிலேயே போகவிட்டார்; தம்பி செய்யத் தவறியவைகளை மன்னித்தார். தம்பியின் தேசபக்தியையும் இலக்கிய மோகத்தையும் கண்டு அவற்றில் ஈடுபடுவதற்கு வாய்ப்பு அளிக்கும் வகையில், அவனைக் குடும்பத் தொல்லைகளிலிருந்து விடுவித்து, தாமே எல்லாப் பொறுப்புக்களையும் மேற்கொண்டு அவனை ஆளாக்கி விட்டார்.

மாயூரத்துக்கு அருகே உள்ளது கல்கியின் சொந்த ஊர், புத்தமங்கலம். பொன்னியின் நீர்வளம் பெற்று, நிலச் செழிப்புடனும், இயற்கை அழகுடனும் விளங்கும் அந்தக் கிராமத்துக்கு, கல்கியின் குமாரர் ராஜேந்திரனுடனும் அவருடைய தாயார் ருக்மிணி அம்மாளுடனும், மூன்று மாதங்களுக்கு முன்னால் நான் சென்றிருந்தேன். அப்போது வேங்கடராம அய்யர், தம்பியைப் பற்றிய சுவையான தகவல்கள் பலவற்றைத் தெரிவித்தார். தம்பியின் வருங்காலப் புகழின் அறிகுறிகளைப் பாலப் பருவத்திலேயே தாம் கண்டதையும், தம்பியின் திறமைகளுக்குத் தாம் ஊக்கம் ஊட்டியதையும் அவர் எடுத்துச் சொன்னார். 'நான் எதிர்பார்த்ததற்கு மேலாகவே அவன் வெவ்வேறு துறைகளில் சாதனைகள் புரிந்து புகழ் அடைந்தான்' என்று அவர் பெருமையுடன் கூறி, நான் எழுதும் வரலாறு நன்றாக வாய்க்க வேண்டும் என்று வாழ்த்தினார்.

தம்பி அடைந்த புகழைத் தாம் அடைந்தது போலவே பாவித்து மகிழ்ந்து கொண்டிருந்த வேங்கடராம அய்யர், நவம்பர் மாதம் ஏழாந் தேதி காலமானார். கல்கியின் நினைவைப் போற்றி எழுதும் இவ்வேளையில், அவருடைய முத்தண்ணாவையும் போற்றி அஞ்சலி செய்கிறேன்.



'எனக்கு ஒன்றுமே தெரியாது'' என்று ஒரேயடியாகச் சாதித்து விட்டார். எவ்வளவோ சாமர்த்தியமாக எல்லாம் கேட்டும் பயன்படவில்லை. ஆனால் கூளிப்பட்டிக்குப் போனதில் லாபம் இல்லாமலும் போகவில்லை. தேர்தலுக்கு நாலு தினங்களுக்கு முன்பு அங்கு நடந்த ஒரு சம்பவத்தைப் பற்றித் தெரிந்து கொண்டேன். அதை இங்கே சொல்லி விடுகிறேன். அதற்கும் கோவிந்தப் பிள்ளையின் வெற்றிக்கும் ஏதேனும் சம்பந்தம் உண்டா என்று நீங்களே முடிவு செய்து கொள்ளலாம். தேர்தலுக்கு நாலு நாட்களுக்கு முன்பு கூளிப்பட்டிக்குத் தெற்கே எட்டு மைல் தூரத்தில் உள்ள கிராமத்தில் பெரிய சமூக மகாநாடு ஒன்று நடந்ததாம். ஆயிரக்கணக்கான வாக்காளர்கள் இங்கே கூடுவதை முன்னிட்டுச் சட்டசபை அங்கத்தினர்கள் எல்லாரும் தங்கள் தங்கள் பரிவாரங்களுடன் மகாநாட்டுக்கு விஜயம் செய்திருந்தார்கள். ஜமீன்தாரும் போயிருந்தார். திரும்பிப் போகும்போது அபேட்சகர்கள் எல்லாரும் கூளிப்பட்டி வழியாகத்தான் போக வேண்டியிருந்தது. மாலை ஐந்து மணிக்கு மகாநாடு ''பலமான கரகோஷங்களுக்கிடையே இனிது நிறைவேறிய'' பின்னர், அபேட்சகர்களின் மோட்டார் வண்டிகள் ஒவ்வொன்றாகப் புறப்பட்டன.

இப்பொழுது வாசகர்கள் என்னுடன் கிளம்பி மோட்டார் வண்டிகளைவிட வேகமாய்ப் பிரயாணம் செய்து, கூளிப்பட்டிக்கு வடக்கே ஒரு மைல் தூரத்திலிருந்த சேரிக்கு வந்துவிட வேண்டும். ஆஹா! என்ன பயங்கரமான காட்சி! சேரியில் உள்ள குடிசைகளில் சில தீப்பற்றி எரிகின்றன. தீ வேகமாகப் பரவிக் கொண்டிருக்கிறது; காற்று பலமாக அடிக்கிறது. ஐயோ! குடிசையிலிருந்து பக்கத்திலுள்ள வைக்கோற்போரிலும் தீப்பிடித்துக் கொள்கிறது. ''வானை நோக்கிக் கைகள் தூக்கி வளரும்'' தீயின் காட்சி என்ன பயங்கரம்! தீயை அணைப்பதற்கு எவ்வித முயற்சியும் காணப்படவில்லை. மக்களையே அதிகமாய் அங்கே காணோம். ஸ்திரீகளும் குழந்தைகளும்தான் சுற்றிச் சுற்றி வந்து அழுதுகொண்டிருக்கிறார்கள். அங்கிருக்கும் இரண்டோர் ஆண் மக்களும் அந்த ஸ்திரீகளையும் குழந்தைகளையும் தீ விபத்துக்காளாகாமல் தப்புவித்துக்கொண்டிருக்கிறார்கள். எரியும் குடிசைகளுக்கு அருகே அவர்கள் போகாவண்ணம் தடுத்துக் கொண்டிருக்கிறார்கள்.

ஜில்லா போர்டு பெரிய சாலை இந்தச் சேரியைப் பிளந்து கொண்டு போகிறது. சாலைக்கு இடது பக்கத்தில் இருந்த குடிசைகள் எல்லாம் ஏறக்குறைய எரிந்து போயின. வலது புறத்திலுள்ள குடிசைகளுக்கு இன்னும் நெருப்பு வரவில்லை. ஐயோ! காற்று இப்படிச் சுழன்று அடிக்கின்றதே! ஒரு ஜுவாலை பறந்து சென்று வலதுபுறத்துக் குடிசைகளில் ஒன்றின் மீது விழுகின்றது! ஆகா! சட்டென்று சென்று அந்த ஒரு கீற்றை இழுத்தெறிந்து ஒரு குடம் தண்ணீரைக் கொட்டினால் நெருப்புப் பரவாமல் தடுக்கலாம். யாரேனும் அப்படிச் செய்யப் போகிறார்களா? ஒருவரையும் காணோம். பெண்களும், சிறுவர் சிறுமிகளும் சுற்றிச் சுற்றி வந்து வயிற்றிலும் வாயிலும் அடித்துக் கொள்கிறார்கள். அங்கிருந்த இரண்டோர் பெரிய ஆட்களுக்கு இவர்களை வெளியே பத்திரமாய்க் கொண்டு வந்து சேர்ப்பதே பெரிய காரியமாயிருக்கிறது. அதுவரையில் புத்திசாலிகள்தான். அப்படி

## பூரண வாழ்வு



கோவையில் பெரும் தொழில் பிரமுகர்களாக விளங்கும் திருவாளர்கள் ஜி. கே. தேவராஜ், சுந்தரம், ராஜகோபால் ஆகியோரின் அன்னையார் ஸ்ரீமதி லக்ஷ்மி அம்மாள் தமது எண்பத்தைந்தாவது வயதில் சென்ற 7-11-72 அன்று வைகுந்தப் பதவியை அடைந்தார்.

இந்த அன்னையாரின் பெயரில்தான் இன்று உலகப் புகழ் பெற்று விளங்கும் கோவை லக்ஷ்மி மில்ஸ் பல்லாண்டுகளுக்குமுன் தொடங்கப்பெற்றது. அன்னையின் ஆசியாலும், ஆண்டவனின் அருளாலும் லக்ஷ்மி மில்ஸ் செழிப்பாக வளர்ந்து பல கிளைத் தொழிற்கூடங்களையும் தோற்றுவித்தது; பல்லாயிரக்கணக்கான மக்களுக்கு வேலைவாய்ப்பளித்தது. இத்தொழிற்கூடங்களைச் சிறப்பாக நடத்திவரும் தம் புதல்வர்கள் நல்ல தர்ம சிந்தையும் கொண்டவர்களாக விளங்கும் காட்சியையும் காணப்பெற்றார், ஸ்ரீமதி லக்ஷ்மி அம்மாள்.

புதல்வர்கள் தங்கள் தந்தையாரின் பெயரில் குப்புசாமி நாயுடு ஆஸ்பத்திரி ஒன்று சிறப்பாக நடத்தி வருகிறார்கள். இளம் பிராயத்தில் தங்களை விட்டுப் பிரிந்த அருமைச் சகோதரர் பெயரில், ''மணி உயர்நிலைப் பள்ளி'' நடத்தி வருகிறார்கள்.

இப்படிச் செல்வம் ஈட்டும் பணியும், ஈட்டிய செல்வத்தை அறவழியில் செலவழிக்கும் மனப்பாங்கும் கொண்ட புதல்வர்களைப் பெற்றதால் அந்த அம்மையார் எவ்வளவு மனம் பூரித்திருப்பார் என்று சொல்லத் தேவையில்லை. இப்படி எல்லா வகையிலும் பாக்கியம் செய்த அம்மையார் பூரண வாழ்வு வாழ்ந்து மறைந்திருக்கிறார். அந்த அன்னையை இழந்த புதல்வர்களுக்கும் உறவினர்களுக்கும் நமது அனுதாபங்கள்.




"ஆகா! கண்டுபிடித்துவிட்டேன்!"
"என்ன, புதிய கிரகமா?"
"வெடிப்புக் காற்றுருவைப் பசைக் காற்றுப் அறுத்து விட்டது."

யும் ஒரு சிறுவன் மீது நெருப்புப் பட்டு முதுகு வெந்து போகிறது. அவனைச் சாலையில் கொண்டு வந்து போடுகிறார்கள்.

பூம்! பூம்! பூம்! ஒரு மோட்டார் வண்டி அதிவேகமாய் வருகிறது. சமூக மகாநாட்டுக்குச் சென்றிருந்த திவான்பகதூர் வீரண்ணப் பிள்ளையும், திருவாளர் பெரியசாமித் தேவரும் அதிலே வருகிறார்கள். தீப்பிடித்த குடிசைகளுக்கருகே மோட்டார் வண்டி நிற்குமா? ஏழை ஆதித் திராவிடர் மீது இப் பெரிய மனிதர்கள் கண்ணோட்டம் செலுத்துவார்களா? இல்லை; இல்லை. கண் மூடித் திறக்கும் நேரத்தில் மோட்டார் பறந்துபோகிறது. அன்றிரவு ஜில்லா கலெக்டர் விருந்துக் கச்சேரி. அவர்கள் எப்படி இங்கே நிற்க முடியும்?

ஒரு நிமிஷத்துக்கெல்லாம் மீண்டும் பூம், பூம், என்ற சத்தம். ராவ்பகதூர் சடையப்ப முதலியாரின் மோட்டார் அதிவேகமாய் வருகிறது. இதுவும் இங்கு நில்லாமலே போய்விடுகின்றது. அடுத்தாற்போல் ஸ்ரீமான் வராகவதாரமய்யங்காரின் வண்டி. ஆகா! இவரல்லவோ புண்ணியவான்? ஏழைகளின் நண்பர்? வண்டி மெதுவாக நிற்கிறது. உடனே பலர் ஓடி வந்து மோட்டாரைச் சூழ்கிறார்கள்.

ஐயங்கார்: தீ எப்படிப் பிடித்தது?

கூட்டத்தில் பலர்: சாமி! தெரியவில்லே. (கூச்சலும் அழுகையும்)

ஐயங்கார்: அட, சனியனே! சும்மாயிருங்கள். வெறும் மூடத்தனம். தீப்பிடித்தவுடன் ஏன் அணைக்கக் கூடாது? வெறுங் கூச்சல் போட்டால் என்ன பிரயோஜனம்?

ஒருவன்: ஐயா, சாமி! இந்தப் பையன் முதுகு எரிந்துபோய்விட்டது.

ஐயங்கார்: டிரைவர்! பலமான காயமா பார்.

டிரைவர்: அதெல்லாம் இல்லே. சொற்பக் காயந்தான்.

ஐயங்கார்: சரி, தேங்காய் எண்ணெய் தடவு. தெரிகிறதா? சீக்கிரம் வண்டியைவிடு.

அடுத்த கணத்தில் மோட்டார் மாயமாய்ப் பறந்து போகிறது.

மேற்கூறியவையெல்லாம் ஐந்து நிமிஷங்களுக்குள் நடந்தன என்பதை நேயர்கள் நினைவில் வைக்க வேண்டும். கடைசியாகக் காவடி கோவிந்தப் பிள்ளையின் மோட்டார் வந்து குடிசைகளுக்கருகில் நின்றது. பிள்ளை சட்டென்று மோட்டாரிலிருந்து வெளியே குதித்தார். வலதுபுறத்துக் குடிசைகளில் ஒன்றில் இப்போழுதுதான் தீப்பிடித்துக் கொண்டிருப்பதை அவர் உடனே கவனித்தார். ''டிரைவர்! ஓடி வா! ஓடி வா!'' என்று கூவிக் கொண்டே அவர் அந்தக் குடிசையை நோக்கி ஓடினார். டிரைவரும் பின்னால் சென்றான். இருவரும் அக்குடிசையின் கூரையில் தீப்பிடித்திருந்த கீற்றை இழுத்துக் கீழே போட்டார்கள். ''குடம்! குடம்!'' என்று காவடிப் பிள்ளை கத்தினார். சில பெண்கள் மண் குடம் கொண்டு வந்தார்கள். அவற்றுள் ஒன்றைப் பிள்ளை வெடுக்கென்று பிடுங்கிக் கொண்டு போய்ப் பக்கத்திலிருந்த வாய்க்காலிலிருந்து ஜலம் மொண்டு வந்தார். அவரைப் பின்தொடர்ந்து இன்னும் பலரும் ஜலம் கொண்டு வந்து கொட்டினார்கள். தீ அணைந்தது. சாலைக்கு வலது புறத்திலிருந்த இருபது குடிசைகள் தப்பின.

காவடிப் பிள்ளையும், டிரைவரும் திரும்ப வந்து மோட்டாரில் உட்கார்ந்தார்கள்.

டிரைவர்: சுத்த மூட ஜனங்கள். சுலபமாய்த் தீயை அணைத்திருக்கலாம். பக்கத்திலே வாய்க்கால்.

காவடிப்பிள்ளை: பாவம்! அவர்களைக் குறை சொல்லி என்ன பயன்? அவர்களை மூடர்களாய் வைத்திருப்பது யார்? மேலும் ஆண் பிள்ளைகளெல்லாம் வயல்வெளிக்குப் போய்விட்டார்கள். குழந்தைகளும் ஸ்திரீகளும் என்ன செய்வார்கள்?

டிரைவர்: சுமார் ஐம்பது குடிசைகள் போயிருக்கும்.

காவடிப்பிள்ளை: பட்ட காலிலே படும். எல்லாம் ஏழைகளுக்குத்தான் வருகிறது. இரவு தங்க என்ன செய்வார்களோ?

கூட்டத்தில் ஒருவன்: சாமி! இந்தப் பையன் முதுகு வெந்து போய்விட்டது.

காவடிப்பிள்ளை: எங்கே? எங்கே? கொண்டு வா!

பையனைக் கொண்டு வந்தார்கள். பிள்ளை பார்த்துவிட்டு உடனே அவனை மோட்டாரில் தூக்கிப் போடச் செய்தார். பின்னர் வண்டி கிளம்பிற்று.

மறு நாள் காவடிப் பிள்ளையிடமிருந்து கூளிப்பட்டி ஜமீன்தாருக்கு ஒரு கடிதமும், ஐம்பதுரூபாய் பணமும் கிடைத்தன. ''இந்தச் சிறு தொகையைப் புதிய குடிசைகள் போட்டுத் தர உபயோகப்படுத்துங்கள். பையன் வைத்தியசாலையில் குணமடைந்து வருகிறான் என்று அவன் பெற்றோர்களுக்குத் தெரியப்படுத்துங்கள்'' என்று பிள்ளை எழுதியிருந்தார்.

மேற்கண்ட சம்பவத்துக்கும் காவடிப் பிள்ளையின் வெற்றிக்கும் ஏதேனும் சம்பந்தமுண்டா என்று நான் ஜமீன்தாரை ஆனமட்டும் கேட்டுப் பார்த்தேன். அவர் வாயிலிருந்து பதில் வருவிக்க முடியவில்லை. ஆயினும் பின்வரும் விஷயங்களைக் கோவை செய்து நேயர்கள் சிந்தித்துப் பார்க்க வேண்டுகிறேன்:

1) அந்த நேரத்தில் அந்த ஏழைகளின் குடிசைகள் தீப்பிடிக்கக் காரணமேயில்லை. ஒரு வீட்டிலும் அப்போது அடுப்புக்கூட மூட்டவில்லை என்று எல்லாரும் சத்தியம் செய்கிறார்கள். 2) ஒருவர் இருவரைத் தவிர பெரிய ஆட்கள் யாருமில்லாமல் அச்சமயம் மாயமாய்ப் போனார்கள்.



# சோதனை செய்த மைதானத்தில் சாதனை புரிந்த வீரர்கள்!

சென்னை, சேப்பாக்கம். துலீப் கோப்பை கிரிக்கெட் பந்தயம். 'துலீப் கோப்பைப் பந்தயத்துக்கும், ரஞ்சீத் கோப்பைப் பந்தயத்துக்கும் மூன்று நாட்கள் போதுமா?' என்று கிரிக்கெட் கிரிடிக்குகளின் வாதப் பிரதிவாதங்கள்.

ஆனால் சோதனையாக மூன்று நாட்களுக்குள் இரண்டு இன்னிங்ஸுகளும் முடிவுற்றன. நூற்று நாற்பது நிமிஷங்களில் இரண்டாவது இன்னிங்ஸில் தெற்கத்திய கோஷ்டியின் அத்தனை விக்கெட்களையும் 97 ரன்களுக்குள் சரிய வைத்துப் 'பிட்ச்' வேடிக்கை பார்த்தது. மேற்கத்திய கோஷ்டி பந்து வீச்சு நிபுணர்கள் ஸல்கோன்கரும், ஷிவல்கரும் அந்தப் புண்ணியத்தைக் கட்டிக் கொண்டதோடு டெஸ்ட் கதவுகளைத் தட்டும் பாக்கியசாலிகளாகவும் ஆகிவிட்டார்கள்!

இந்தச் சேப்பாக்கம் 'பிட்ச்'ன் மகத்துவத்தை அறிந்து கொள்ளவோ என்னவோ செலக்டர்கள் கோபிநாத்தும், கோர்பாடேயும், டானியும் மாட்ச் முடிந்ததும் அதை வலம் வந்து கொண்டிருந்தார்கள். 'துலீப் கோப்பையில் தெற்கத்திய கோஷ்டியைச் 'சோதித்தாற்'போல் இங்கிலாந்து — இந்திய டெஸ்டில் நம் இந்திய கோஷ்டியைச் சோதித்து விடாதே' என்று அவர்கள் வலம் வந்து வேண்டிக் கொண்டார்களோ என்னவோ?

படங்கள்: 1. ஷிவல்கர். 2. ஸல்கோன்கர். 3. பிரஸன்னா. 4. வெங்கடராகவன். 5. பட்டோடி. 6. சந்திரசேகர். 7. இன்ஜினியர். 8. காவஸ்கர்.







கேப்டன் வாடேகர்.

□ சர்வகலாசாலைகளுக்கிடையில் நடக்கும் கிரிக்கெட் பந்தயத்தில் ஓர் ஆள் குறையவே அந்த மாணவனது நண்பன் 'இந்தப் பந்தயத்தில் கலந்து கொண்டால் உனக்கு இரண்டரை ரூபாய்ச் சாப்பாட்டுப் பணம் கிடைக்கும்' என்று ஆசை காட்டி அழைத்துச் சென்றான். லெக் ஸ்பின்னர் பாலு குப்தே அழைத்துச் சென்ற அந்த மாணவன்தான் பின்னால் இங்கிலாந்து கிரிக்கெட் டெஸ்டிலும் மேற்கிந்தியத் தீவு கிரிக்கெட் பந்தயத்திலும் மாபெரும் வெற்றி சம்பாதித்துத் தந்த காப்டன் வாடேகர்!

இந்தத் துலீப் கோப்பைப் பந்தயத்தில் ஒன்றரை சதத்துக்குமேல் கண்டு புகழ்பெற்று விட்டவர் இவரே!

— குண்டுமணி





# மாப்பிள்ளை அழைப்பு

மோட்டார்ப் பந்தயத்தில் விறுவிறுப்போடு ஆரம்பிக்கும் திரைக்கதை, மாப்பிள்ளை அழைப்பு ஊர்வலத்துடன் டக்கென்று முடிந்து விடுகிறது; ஏனென்றால், மணப்பெண்ணும் அவள் தந்தையும் கொலை செய்யப்படுகின்றனர்.

ஆரம்பத்திலேயே முடிந்திருக்க வேண்டிய படத்தை இழு இழு என்று இழுத்துப் பாடாய்ப் படுத்தியிருக்கிறார்கள்.

இரட்டைச் சகோதரர்களாம். (அவர்கள் ஒரே மாதிரி தோற்றம் கொண்டவர்களாய்த்தான் இருந்தாக வேண்டும். அது திரைப் படத்தின் தலையெழுத்து! அப்பொழுது தானே பல குழப்பங்களை விளைவிக்க முடியும்?) இரட்டையர்களில் ஒருவன் ஒரு ஹோட்டலில் படுகொலை செய்யப்படுகிறான்; உடனே அடுத்தவன் பழி வாங்கும் உணர்ச்சியில் துடிக்கிறான்; இறந்து போன சகோதரனின் மகளை அதே பழி வாங்கும் உணர்ச்சியோடு வளர்க்கிறான்; இவையெல்லாம்தான் படத்தில் 'சஸ்பென்ஸ்'களாம்...!

ஹாஸ்யம் என்ற பெயரில் பல அசம்பாவிதங்கள் இருக்கின்றன. சலவைத் தொழிலாளி ஒருவனின் மனைவியும், மகளும் அழகுப் போட்டியில் கலந்துகொள்ள ஆசைப்படுகிறார்களாம். இந்தப் பைத்தியக்காரக் கற்பனை எல்லை மீறிப் போய், வேண்டாத மணமகன் புரோகிதர் வேஷத்தில் வந்து மணமகளுக்குத் தாலி கட்டும் அளவுக்குச் சென்று அசடு வழிகிறது! வேண்டாத மணமகனாக வருபவர் நாகேஷ்! அவர் இருந்தும் நம்மால் நகைச்சுவையை ரசிக்க முடியாமற் போனது துர்ப்பாக்கியந்தான்!

ஒரு படம் என்றால் அதற்குக் கதை என்று ஒன்று வேண்டுமா? அப்படித்தான் இப் படத்தைப் பார்ப்பவர்களுக்குக் கேட்கத் தோன்றும். இப்படத்தில் வரும் பெண்கள் தங்கள் ஆடைகளைப் பற்றிக் கவலையே படவில்லை. படாதிபதி கதையைப் பற்றிக் கவலைப்படாத போது தாங்கள் மட்டும் எதற்காக ஆடையைப் பற்றிக் கவலைப்பட வேண்டும் என்று அவர்கள் கேட்கலாம்!

பழி வாங்கும் உணர்ச்சியினால் உந்தப்படும் கதாநாயகன், முன்னை முன்னாள் எடுப்பது போல் தானும் தவறான வழியில் இறங்குகிறான். அதற்குப் போலீஸ் துணை நிற்கிறதாம்.... படம் பார்ப்பவர்களைப் பழி வாங்கி விட்டார்கள். (பரமண்டலத்தில் இருக்கும் பரமபிதாவே, அவர்கள் என்ன பிழை செய்தார்கள்! அவர்களுக்கு ஏன் இந்தத் தண்டனை?)

பாடல்கள் பாடாய்ப் படுத்துகின்றன. ஒளிப்பதிவில் பாராட்ட எதுவும் இல்லை.

மனோகர் வில்லனாக வருகிறார். நன்றாகவே நடித்திருக்கிறார். அநுபவப்பட்டவராயிற்றே! சுந்தரராஜன் இரட்டை வேடம் ஏற்றுத் தம் பாகத்தைச் சிறப்பாகச் செய்திருக்கிறார்.

விஜயலலிதா கவர்ச்சியைக் காட்டிக் காலையும், கையையும் தூக்கி ஆடியிருப்பதோடு மல்யுத்தமும் புரிந்து, கண்ணீர் சிந்தும் கதாநாயகியாகவும் வருகிறார்! "ஜெயசங்கர் சண்டைக் காட்சிகளில் தமக்கே உரிய லாகவத்தைக் காட்டியிருக்கிறார். இப்படியெல்லாம் இருந்தும் "மாப்பிள்ளை அழைப்பை" ரசிக்க முடியவில்லையே!

நடிப்பாற்றல் மிக்க ஜெயசங்கரை வைத்து ஒரு நல்ல படத்தைத் தயாரிக்க முடியாதா என்ன? இந்தப் படத்தில் எதைப் பற்றியும் சிந்திக்கத் தவறிவிட்ட தயாரிப்பாளர்கள் இதையாவது சிந்தித்துப் பார்க்க வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். — **காந்தன்**







# அஞ்சல் வழி – அறிவு வளர ஒரு வழி

தம்பி சீனிவாசன்

**ப**ட்டம் பெற்ற எத்தனையோ பேர் வேலை இல்லாது இருக்கும் போது, வேலையில் இருப்பவர்கள் பட்டம் பெறப் பாடுபடுவதைப் பார்க்க வேண்டுமா? 'ஸ்டிரைக்' என்பதே செய்யாத மாணவர்கள் நிறைந்த பல்கலைக் கழகத்தைக் காண வேண்டுமா? மாணவர் விரும்பும் பாடப் பிரிவில் 'இடம் இல்லை' என்று சொல்லாமல் சேர்த்துக் கொள்ளும் கல்லூரியும் இருக்கிறதா?

இருக்கிறது. அதுவே மதுரைப் பல்கலைக் கழகத்து அஞ்சல் வழிக் கல்லூரித் துறை. தமிழ் நாடெங்கும், பிற மாநிலங்களிலுமாக ஆறாயிரத்துக்கு அதிகமான மாணவர்கள் கல்வி கற்கும் நிலையம் இது. எல்லோரும், அவரவர் வீட்டை விட்டு நகராமல், பத்து நாட்களுக்கொரு முறை தபாலில் வரும் பாடங்களைப் படித்து, வினாக்களுக்கு விடை எழுதி, விளக்கங்களைப் புரிந்து கொண்டு தேர்ச்சியடையும் படிப்பு இது.

கல்லூரியில் கல்வி கற்க ஆர்வம் இருந்தும் குடும்பப் பொறுப்பு காரணமாக இளமையிலேயே வேலையில் சேர்ந்து விட்ட பலர் மதுரைப் பல்கலைக் கழகம் வழங்கும் இந்தப் புது வாய்ப்பைப் பயன்படுத்தி, பட்டம் பெறுவதற்காகப் படிக்கின்றனர். அவர்களில் பலருக்கு உத்தியோக உயர்வுக்கு இந்தப் பட்டம் பயன்படலாம்.

கல்லூரியில் இடம் கிடைக்காத இளைஞரும் 'இடம் பஞ்சம்' இல்லாத இந்தப் பயிற்சிக் கூடத்தில் சேர்ந்து பட்டம் பெற முயல்கின்றனர்.

பெண்கள் பலருக்கு இந்தப் பயிற்சி ஒரு பொழுதுபோக்குச் சாதனம்; சிலருக்கு, வாழ்க்கைச் சோதனையை வெல்லும் ஒரு சாதனை. ''என் பெண் அடுத்த ஆண்டுதான் பி.யு.சி. எழுதப் போகிறாள். நான் இந்த ஆண்டே பி.யு.சி. ஆகிவிடுவேன்'' என்கிறாள், இருபதாண்டுகளுக்கு முன் — எஸ். எஸ். எல். சி. படித்த, நான்கு குழந்தைகளுக்குத் தாயான ஸ்ரீமதி சீனிவாசன்.

''என் கணவர் ஒரு சார்டர்ட் அக்கவுண்டெண்ட். ஆகவே, காமர்ஸ் எடுத்துக் கொண்டேன். எனக்கு எல்லாம் கலபமாக

**ஆயிரம் மாணவர்கள் இங்கே. ஆனால் 'ஸ்டிரைக்' இல்லை !**

**பதினேழு வயது முதல் ஐம்பத்திரண்டு வயது வரை மாணவர்கள் !**

**ஆசிரியரைவிட வயதிலும் அந்தஸ்திலும் உயர்ந்த மாணவர்கள்!**



இருக்கிறது'' என்கிறார் ஸ்ரீமதி சாந்தா வேங்கடராமன். தமது கணவரின் அலுவலில் உதவும் தகுதியைப் பெற்றுக் கொள்ளும் பெருமையுடன் பேசுவது போலிருக்கிறது.

திடீரென்று ஒரு சிற்றூருக்கு மாற்றப் பட்ட போலீஸ் அதிகாரியின் மகள் குமாரி ஸ்ரீமதி சட்டென்று ஒரு பெண்கள் கல்லூரியில் சேர முடிகிறதா? மதுரைப் பல்கலைக் கழக அஞ்சல் வழிக் கல்வித் துறைதான் மேற்படிப்புக்குக் கைகொடுக்கிறது.

அரசுப் பணியில் ஓய்வுபெற விருக்கும் அதிகாரிகளிலிருந்து வாழ்க்கையின் பல நிலைகளில் உள்ள பல வயதுப் பிரிவினரும், ''மேல் படிப்பு'' என்ற ஒரே லட்சியத்தில் இப்பயிற்சியில் சேர்ந்துள்ளனர். சாதாரணக் கல்லூரியில் சேர்ந்து படித்துக் காதலித்து மணப்பது சகஜம் என்றால், இந்தக் கல்வித் துறையில் மணந்த தம்பதிகள் சேர்ந்து படிப்பதை சகஜமாகக் காணலாம்—திரு பஞ்சநதீசன், ஸ்ரீமதி பிச்சம்மாள் தம்பதி போல.

சங்கம் வைத்துத் தமிழ் வளர்த்த மதுரையிலே அண்மையிலே தோன்றிச் செழித்து வரும் பல்கலைக் கழகம் பல புதுமைகளைப் புகுத்தி வருகிறது; பல சாதனைகளை நிறைவேற்றி வருகிறது. அதன் முதல் துணைவேந்தர், பன்மொழிப் புலவர் பேராசிரியர் தெ. பொ. மீனாட்சிசுந்தரனார் வகுத்த திட்டங்களுள் ஒன்றே அஞ்சல்வழிப் பயிற்சிக் கூடம். இது, இன்றைய துணைவேந்தர் டாக்டர் மு. வரதராசனாரின் ஆசியுடனும் ஆதரவுடனும் முதல் ஆண்டை முடித்து இரண்டாவது ஆண்டுப் பணியைத் தொடங்கியுள்ளது. கல்வியில் ஆர்வம் உடைய அனைவருக்கும் வாய்ப் பளிக்கும் ஒரே வசதி அஞ்சல் வழிப் பயிற்சியே. முறையான கல்லூரிப் படிப்பை இளம் பருவத்தில் படிப்பதற்கு ஏற்ற பொருள் வசதியோ, ஆர்வமோ, சூழ்நிலையோ இராவிட்டால் ஆயுள் முழுதும் மறுபடியும் வாய்ப்பே இல்லை என்று இத்தனை காலம் இருந்தது. சில ஆண்டுகளாகத்தான் வட இந்தியப் பல்கலைக் கழகங்கள் அஞ்சல் வழிப் பயிற்சியைத் தொடங்கியுள்ளன. அவற்றிலே தமிழக மாணவர்கள் பல்லாயிரக்கணக்கில் சேர்ந்து படித்துள்ளார்கள். எனவே, தமிழகத்திலேயே உள்ள ஒரு பல்கலைக் கழகத்தில் இந்தப் பயிற்சியைத் தொடங்கியதும் அதில் மாணவர்கள் ஈர்க்கப்படுவது இயல்புதானே. இது தமிழ் நாட்டுப் பல்கலைக் கழகமாதலால், எல்லா மாணவருக்கும், 'தமிழ்' ஒரு முக்கிய பாடமாக விளங்குகிறது.

துணைவேந்தர் டாக்டர் மு. வ. அவர்கள் குறிப்பிடுவதுபோல், இந்த அஞ்சல் வழிப் பயிற்சி சிற்றூர்களிலும் கிராமங்களிலும் வாழும் மாணவர்களுக்கு ஒரு வரப்பிரசாதம். ''முன்பெல்லாம் ஒரு கிராமத்து மாணவன் மேற்படிப்புக்குக் கல்லூரியில் சேர்வதென்றால், அவன் பட்டணத்துக்குப் போக வேண்டும். அவனுடன் அம்மாவோ, அத்தையோ யாராவது கூடப் போய் ஒரு குடித்தனம் வைக்க வேண்டும். அல்லது கல்லூரி விடுதியில் சேர்க்க வேண்டும். மேற்படிப்பு என்பது பொருளாதார வளர்ச்சியைப் பொறுத்திருந்தது. அது மட்டுமா? பட்டணத்திலே படிக்கப் போன பிள்ளையின் குணம் நல்லபடி இருக்க வேண்டுமே என்ற கவலை பெற்றோரை வாட்டிக் கொண்டேயிருக்கும். அவர்களெல்லாம் இப்போது அஞ்சல் வழியில் படிக்கலாம்; பட்டம் பெறலாம். அவரவர் ஊரிலே குடும்பத்து வேலையையோ, சில்லறைக் கடையையோ, தொழிலையோ பார்த்தபடி பட்டம் பெற வாய்ப்பு இருக்கிறது'' என்கிறார் துணைவேந்தர்.

அஞ்சல் வழிப்பயிற்சி நிலையத்துக்கு நல்ல அதிருஷ்டம் இருக்கிறது. அதனால்தான் அதன் இயக்குநராக டாக்டர் தி. ப. சித்தலிங்கையா வாய்த்திருக்கிறார். இவர் காசி பல்கலைக் கழகத்தின் தமிழ்த்துறைத் தலைவராக இருந்தவர். அதற்கு முன் தில்லி வானொலியில் அனுபவம் நிறைந்தவர். சிறந்த கன்னட இலக்கியங்களைத் தமிழிலே வழங்கும் இலக்கியத் தொண்டர். உற்சாகமான இந்த உழைப்பாளியின் ஊக்கமான தலைமையில் நாற்பதுக்கு அதிகமான ஆசிரியர் குழாமும் அதே அளவில்



1. மதுரைப் பல்கலைக் கழகம்.

2. டாக்டர் மு. வரதராசனார், துணைவேந்தர்.

3. இயக்குனர் டாக்டர் தி. ப. சித்தலிங்கையா.

4. இயக்குனரும், ஆசிரியர் - குழுவினரும்.

5. பொருளாதார வகுப்பு நடைபெறுகிறது. தமது பொருளாதார நிலை காரணமாகக் கல்லூரி செல்ல இயலாத தாய்மார்களும் பெற்றோரும் இங்கே மாணவர்கள்.

நிர்வாகப் பிரிவும் சுறுசுறுப்பாகப் பணியாற்றி வருகின்றன. ஆறாயிரம் மாணவர்களுக்கான பாடங்களை இவர்கள் அக்கறையுடன் தயாரித்து, அச்சடித்து, அவரவர்க்கு ஏற்றவற்றை அனுப்பி, விடைத்தாள்களை வரவழைத்து, விளக்கங்களை அளிப்பது என்று இவர்கள் பணி நீண்டு கொண்டே போகும் பணி — நிறைவு தரும் பணி.

தங்களுக்குப் பாடம் எழுதி அனுப்பும் ஆசான் யார் என்பதை மாணவரும், தமது மாணவர் யார் என்பதை ஆசிரியரும் அறிய ஆண்டுக்கு இரு முறை தமிழ் நாடெங்கும் மாவட்டத் தலைநகரங்களில், ''தொடர்பு வகுப்புகள்'' நடத்துகிறார் டாக்டர் சித்தலிங்கையா. சென்னையிலும் சுற்றுப்புறங்களிலும் சுமார் அறுநூறு பேர் அவரிடம் பி.யு.சி. படிக்கின்றனர். சுமார் முந்நூறு பேர் பி. ஏ. படிக்கின்றனர். இவர்களைச் சந்திக்க நவம்பர் இரண்டாவது சனிக்கிழமை—ஞாயிற்றுக்கிழமையில் பச்சையப்பன் கல்லூரியிலும் ஷெனாய்நகர் திரு வி. க. உயர்நிலைப் பள்ளியிலும் தொடர்பு வகுப்புக்கள் நடைபெற்றன. காலை எட்டு மணி முதல் மாலை ஆறு மணிவரை நடைபெற்ற இந்த வகுப்புக்களில் மாணவர்களும் சோர்வடைந்ததாகத் தெரியவில்லை. ஆசிரியர்களும் அலுப்பு அடைந்ததாகத் தெரியவில்லை. இயக்குனர் டாக்டர் சித்தலிங்கையாவோ, மாணவர்களும், சிலரது பெற்றோர்களும் விடுத்த கேள்விக்கணைகளுக்கெல்லாம் சளிப்பில்லாமல் பதிலளித்து, சந்தேகங்களைப் போக்கி நம்பிக்கையூட்டிய வண்ணம் இருந்தார். தமது சக ஊழியரை ஊக்கியவண்ணம் இருந்தார்.

யாரோ கட்டும் சம்பளம் என்று கருத்தில்லாமல் படிக்கும் மாணவர் அல்லர் இவர். பாடுபட்டு உழைத்த பொருளைக் கொண்டு, பாடுபட்டு விரும்பிக் கற்கும் கல்வி என்பது அவர்கள் காட்டிய அக்கறையில் தெரிந்தது. பரீட்சை முடிவில் சாதாரணக் கல்லூரி மாணவரைவிட, இந்த அஞ்சல்வழி மாணவர் அதிக மதிப்பெண்ணுடன் தேர்வு பெற்றிருந்தால், அதிலே வியப்படைய ஒன்றும் இல்லை.

### மந்திரிக்கு வந்த கோபம்!

சென்னையிலிருந்து புறப்பட வேண்டிய புது தில்லி விமானம் கிளம்பும் சமயம். திடீரென்று அறிவிப்பு: ''சிறு யந்திரக் கோளாறால் விமானம் புறப்படத் தாமதமாகும். பிரயாணிகள் தயவு செய்து இறங்கிவிடவும்.'' எல்லோரும் இறங்க ஆரம்பிக்கும்போது ஒரு பிரயாணி சத்தம் போட்டார், ''யாரும் இறங்காதீர்கள்'' என்று. பைலட் ஓடிவந்தார். ''நீங்கள் எல்லோரும் அடிக்கடி சம்பள உயர்வு கேட்கிறீர்கள். இந்தச் சிறிய கோளாறைச் சரிப்படுத்த முடியாதா?'' என்று கோபமாகக் கேட்டார் அந்தப் பிரயாணி. உடனே ஒரு டஜன் என்ஜினியர்கள் வந்து என்ஜினைச் சரிப்படுத்தினார்கள். விமானம் பதினைந்து நிமிஷங்கள் தாமதமாகப் புறப்பட்டது.

அந்தப் பிரயாணி மத்திய அமைச்சர் சி.சுப்பிரமணியம்.

டைம்ஸ் ஆப் இந்தியா -- கே.ஆர்.

### நாவலோ நாவல்!

'' 'ஐந்தாவது ஐந்தாண்டுத் திட்டம்' இந்த ஆண்டின் தலைசிறந்த கற்பனைப் படைப்பாக இருக்கும்.''

-- டெக்கான் ஹெரால்ட். - பாலி

### மாலை ஆசை!

'கேன் பாரிங்டன்' இங்கிலாந்தைச் சேர்ந்த கிரிக்கெட் வீரர். இவருக்குத் தம்முடைய ரசிகர்களைத் தம் விஷமத்தின் மூலம் குஷிப்படுத்துவதில் ஓர் அலாதி விருப்பம். ஒரு முறை ஒரு டெஸ்டில் எதிர்க்கட்சி 'பாட்ஸ்மன்' செஞ்சுரி அடித்ததும் ஒரு ரசிகர் மாலையை எடுத்துக் கொண்டு ஓடினார். ஒரு போலீஸ்காரர் ரசிகரைத் துரத்தினார். உடனே 'பாரிங்டன்' போலீஸ்காரரைத் துரத்திப் போய்ப் பிடித்துவிட்டு ரசிகரின் மாலை போடும் ஆசையை நிறைவேற்றினார்!

--கேவி.யெம்.

### யார் பொறுப்பு?

ஷேக்ஸ்பியரை பெர்னார்ட் ஷாவுக்குப் பிடிக்காது. குறை கூறிக் கொண்டிருப்பார். ஷேக்ஸ்பியர் அபிமானிகள் ஷாவை மட்டம் தட்ட ஒரு கூட்டம் ஏற்பாடு செய்து அவரைப் பேச அழைத்திருந்தனர். ஷா நல்ல நகைச்சுவையுடன் பேசியபோதிலும் வேண்டுமென்றே அவர் பேச்சை ஒருவரும் ரசிக்கவில்லை; கைதட்டவில்லை. தலைமை தாங்கியவரும் ஷாவைக் கிண்டல் செய்து பேசினார். அதுபோது கூட்டத்தினர் கைதட்டி ரசித்தனர். 'சரியான மூக்குடைப்பு' என்று முணுமுணுத்தனர்.

பெர்னார்ட் ஷா அமைதியாகக் கூறினார்:— ''ஷேக்ஸ்பியர் அபிமானிகளே! நான் இப்போது பேசிய நகைச்சுவைப் பேச்சு சுவையாக இல்லை என்று குறை கூறுகிறீர்கள்; தலைவரும் கிண்டல் செய்தார். நான் பேசியது என் சொந்த நகைச்சுவை அல்ல. ஷேக்ஸ்பியரின் நகைச்சுவையையே நான் பேசினேன். உங்களுக்குச் சிரிப்பு வராததற்கு நான் பொறுப்பாளி அல்ல.''

ஷேக்ஸ்பியர் அபிமானிகள் முகத்தைப் பார்க்க வேண்டுமே!

தகவல்: எஸ். ஏ. டி.




NEW!
SUPER
Surf
FOR SUPER WHITENESS

ரம்பா ஸ்டுடியோ.

முன்னுக்கு வந்து கொண்டிருக்கும் புது முகம் மேனகாவும், 'அகில உலக நடிக பூஷணம்' முரளியும் கலந்து கொள்ளும் 'ஷூட்டிங்'.

அந்த நடிகைக்கு ஒரு குருட்டு அதிர்ஷ்டம். அ. உ. ந.பூ. உடன் நடிக்கும் சந்தர்ப்பம் அவளுக்குத் திடீரென்று கிடைத்தது. அந்த நடிகையை அவருக்குப் பிடித்திருந்தது என்பது காரணமல்ல; இதுவரையில் அவருக்குப் பிடித்திருந்த ஒரு பிரபல நடிகை, அவருக்கு இப்போது பிடிக்காமல் போனதுதான் காரணம். அந்தப் 'பிரபல'த்துக்குப் போட்டியாக இவளைத் தயார்செய்து கொண்டு வந்தார்.

அன்று ஒரு சோகக் காட்சி ஷூட்டிங்.

இதுவரை ஒருத்தியைக் காதலித்து, அணைக்கட்டுக்களில் ஓடியாடி, கடற்கரை மணலில் உருண்டு புரண்டு, பார்க்குகளில் ஆடிப் பாடிய கதாநாயகன், அவளைக் கைவிட்டு விடுகிறான். காதலி, மனமுடைந்து அவனிடம் வந்து, தன்னைக் கைவிடக் கூடாது என்று கெஞ்சி அழுது கதறுகிறாள்....

'' ஸார் !.... ரெடியா ?.... எஸ்...... லைட்ஸ் ஆன்.... ஸ்டார்ட்....'' — டைரக்டரின் பணிவான குரல். கதாநாயகன் செட்டில் இருக்கிறாரே, டைரக்டர் மாதிரி, அதிகாரமாகக் கட்டளையிட முடியுமா ?

''டேக் ஒன்....'' — க்ளாப் தலையைக் காட்டி மறைந்தது.

நடிகை வசனம் பேசிக் கொண்டே நடித்தாள்.

''கட்... கட்...'' — டைரக்டருக்கு அந்த நடிப்பு திருப்தியளிக்கவில்லை.

'' அம்மா ! இன்னும் கொஞ்சம் சோகத்தோடு நடிக்கணும். இது ரொம்பச் சோகமான காட்சி. உங்க முகத்திலே சோக பாவம் ததும்பணும்....'' என்று சொல்லி, அவரே அந்த வசனத்தைப் பேசி நடித்துக் காட்டினார்.

''ரெடி.... டேக் டூ...''

காமிரா சுழன்றது.....

''கட்... கட்...'' — மீண்டும் டைரக்டரின் அதிருப்திக் குரல்.

''தங்கச்சி ! பாத்திரத்தை உணர்ந்து நடிக்கணும்மா.... உன்னை அன்போடு காதலித்தவன், இவர்னு உன்னைக் கைவிட்டுட்டா, உன் வாழ்க்கையே பாழாயிடாதா ?'' என்றார் அ.உ.ந.பூ.

அவளுக்குப் புரியவில்லை.

'காதலன் அவளைக் கைவிட்டு விட்டால், வாழ்க்கை எப்படிப் பாழாய்ப் போகும்?'

பேசாமல் நின்றாள் அவள்.

''உன் வாழ்க்கையே பாழாய்ப் போகும்போது உனக்கு எவ்வளவு வருத்தமாயிருக்கும்? அந்த வருத்தத்தை உன் முகத்திலே காட்டணும்மா.....'' இந்த முறை கதாநாயகனே அந்த நடிப்பை நடித்துக் காட்டினார்.

''டேக் த்ரீ.....''—க்ளாப் — காமிராவின் கிர்ர்....

மீண்டும், ''கட்...கட்.'' டைரக்டரின் சோகக் குரல்.

அவளுக்குச் சோக பாவம், முகத்திலோ பேச்சிலோ வரவேயில்லை.

எப்படி வரும் ?

முதல் படம் வெளியாவதற்குள்ளேயே நான்கு படங்கள் — அத்தனையும் வர்ணப் படங்கள் — அந்தக் கதாநாயகனுடன் அவளுக்கு ஒப்பந்தமாகியிருக்கின்றன. அதுமட்டுமா? நேற்று ஒரு பிரபல, பிரம்மாண்ட படத் தயாரிப்பாளர், தம் அடுத்த படத்துக்கு அந்தக் கதாநாயகனை 'புக்' பண்ணிவிட்டு, கதாநாயகிக்கு ஒரு புது முகத்தைத் தேடிக் கொண்டிருப்பதாகக் கேள்விப்பட்டு, உடனே கதாநாயகன் வீட்டுக்குப் போய், அந்தப் படத்திலும் தன்னையே போட ஏற்பாடு செய்து, அந்தப் படமும் அவள் கைக்கு வந்திருந்தது. மொத்தம் ஐந்து வர்ணப் படங்கள் என்றால், சும்மாவா, என்ன?

மேனகா, பகலிலும் இரவிலும் இனிய, பிரம்மாண்டமான கலர்க் கனவுகளிலே மிதந்து கொண்டிருந்தாள்.

விலைவாசி போல் உயர்ந்து கொண்டே போகும் பாங்க் அக்கவுண்ட்.... கப்பல்போல் குலுங்கி அசைந்து தெருவையே அள்ளிக் கொண்டு பறக்கும் 'பெரிய' கார். அரண்மனை போன்ற மாளிகை.... அலமாரிகள் நிறைய தங்க, வைர





நகைகள், பட்டுப் புடவைகள்... ஷோ கேஸ் நிறைய பரிசுகள், விருதுகள்....

இன்னும் —

பத்திரிகைகளிலே, வருமான வரி பாக்கி லிஸ்டில் அவள் பெயரில் லட்சக்கணக்கான ரூபாய் — அதிகாரிகள் அவள் வீட்டைச் சோதனையிடுகிறார்கள் — பூஜையறை, படுக்கை யறை, குளியலறை, தோட்டம் எதிலும் கறுப் புப் பணம் கிடைக்காமல் திணறுகிறார்கள். அவளுடைய நமட்டுச் சிரிப்பு ('நான் ஒளித்து வைத்திருக்கும் இடம், கடவுளுக்கே தெரி யாதே!') 'நடிகையின் வீடு சோதனை' என்ற பரபரப்பான பத்திரிகைச் செய்தி, பாராளு மன்றத்தில் இது பற்றிய கேள்வி பதில்— அதன்மூலம் கிடைக்கும் ஓசி விளம் பரம், புகழ்.

கனவு — கனவு — கனவு—கனவு!

இப்படி லட்சக்கணக்கான செல்வத்திலே திளைத்துக் கொண்டிருந்தவளுக் குச் சோகமாவது? மகிழ்ச்சியே உருவாக நட(ன)மாடும் அவளுக்கு வருத்தமாவது ?

கிளிஸரின் அழுதபோதுதான், அவள் முகம் அழகில்லை !

'டேக்'குகள் கூடிக் கொண்டேயிருந்தன. ஷாட் 'ஓ.கே.'யாகவில்லை.

எல்லோரும் அலுத்துப்போய்விட்டார்கள்.

''சரி, இப்போது இடைவேளை... காப்பி சாப்பிட்டுவிட்டு மறுபடியும் பார்ப்போம்.... ஓய்வுக்குப் பிறகாவது அம்மாவுக்கு 'மூடு'





''பஸ் ஸ்டாப் இங்கே இருக்கு. நீங்கள் ஐம்பது மீட்டர் தள்ளி நிறுத்திட்டீங்களே....!''
''எனக்குத் தெரியாதா. டிரைவர் அங்கு பிரேக் போட்டால் பஸ் இங்குதான் நிற்குமென்று?''
— சுதர்சன்

வருதான்னு பார்ப்போம்....'' என்று கூட்டார்ந்தார் டைரக்டர்.

ஸெட்டுக்கு வெளியே நாற்காலியில் உட்கார்ந்திருந்த முரளிக்கு, திடீரென, அந்தப் பழைய ஜோடி நடிகை சொன்னது, நினைவில் தெறித்தது :

''புதுமுகத்தை அறிமுகம் பண்ணுறீரோ? பண்ணட்டும்..... புது முகத்தைப் போட்டால், ரேட் குறையும், செலவும் குறையும்னு புரொட்யூஸர்களெல்லாம் நினைச்சுக்கிட்டிருப்பாங்க. ஆனால் அந்தப் புது முகம், ரீ டேக், ரீடேக்குனு பிலிம் கருவேலே சாப்பிட்டுக்கிட்டிருப்பா! கால்ஷீட், ஸ்டூடியோ செலவு எல்லாம் அதிகமாகிக்கிட்டே போகும். கடைசியிலே அவர் பேச்சைக் கேட்டுப் படம் எடுத்த படாதிபதி தலையிலே கை வைச்சுக்கிட்டு, 'அம்போ'னு நடுத்தெருவில் நிக்கப்போறார்!''

முரளி திகைத்தார்: பழைய 'பிரபலம்' சொன்னது, உண்மையாயிடுமோ?

தம் பக்கத்திலே நின்ற கூட்டத்திலிருந்து நான்கு பேரைத் தனியே கூப்பிட்டு, அவர்களிடம் ஏதோ ரகசியமாகச் சொன்னார். உடனே நால்வரும் காற்றாய்ப் பறந்தனர்.

சில நிமிடங்கள் கழித்து — ஸ்டூடியோ ஆபீஸிலிருந்து ஓர் ஆள், மேனகாவிடம் வந்தான்: ''அம்மா ! உங்களுக்கு போன் வந்திருக்கு.......''

''யாரது ?''

''யாரோ ஒரு புரொட்யூஸர். உங்ககிட்ட நேரடியாகப் பேசணுமாம்.

நடிகை போனை எடுத்துப் பேசினாள்:

''ஹலோ, நான் மேனகா பேசுகிறேன்...''

'' ஹலோ, நான்தான் வெங்கண்ணா பிக்சர்ஸ் வேங்கடாசலம் பேசறேன்.... நம்ம 'வெங்காயத் தோல்' படத்துக்கு உங்களை 'புக்' பண்ணியிருந்தேனே, அதை ரத்துபண்ண வேண்டியதாயிடுச்சம்மா...மன்னிக்கணும்!''

''என்ன, ரத்து பண்றீங்களா? அண்ணன் தானே என்னை அந்த ரோலுக்குப் போட்டிருந்தாரு? அதை எப்படி நீங்க ரத்து பண்ண முடியும்? அண்ணன்கிட்டே சொல்லட்டுமா?''

'' முரளி அண்ணன்தானம்மா இப்போ சொல்லி அனுப்பியிருக்காரு. உங்க நடிப்பு அவருக்குத் திருப்தி இல்லையாம். அதனாலே உங்களைக் கான்ஸல் பண்ணிட்டு, வேறு நடிகையைப் போட்டுக்கலாம்னு சொல்லிட்டாரு'' என்று போனை வைத்தார் வேங்கடாசலம்.

அவளுக்குத் தூக்கிவாரிப் போட்டது. அந்த அதிர்ச்சியின் இறுக்கம் தளர்வதற்குள், அடுத்த ட்ரிங்... ட்ரிங்... டிரிங்... ஒலி!

போனை எடுத்தாள் மேனகா.

''ஹலோ, மேனகாம்மா இருக்காங்களா?''

''எஸ்... நான் மேனகா தான் பேசறேன்.''

''ஹலோ, நான்தான் ஏ. பி. பிக்சர்ஸ் புரொடக்ஷன் மானேஜர் பேசறேன். இப்ப தான் நம்ம ஹீரோ முரளியண்ணன் ஆள் அனுப்பி விருந்தார். நம்ம 'ஆடிக் காற்று' படத்திலே உங்களை ஹீரோயினாப் போட்டிருந்தோமே, அதைக் கான்ஸல் பண்ணச் சொல்லிட்டார் அண்ணன்......''

தொடர்ந்து, இன்னும் இரண்டு சோக 'போன்'கள்!

அரண்மனையைக் காணோம்..... சொகுசுக் காரைக் காணோம்..... பழையபடி, அவளும் தாயும் ரயிலேறுகிறார்கள்...சொந்தக் கிராமத்துக்கு நடந்து போகிறார்கள்.... அங்கே கூரை வீட்டிலே மறுபடியும் இட்டிலி, ஆப்பம், கண்டல் செய்து —

''அம்மா ! ஷாட் ரெடியாயிடுச்சு..... வாங்க......'' ஸெட்டிலிருந்து ஒருவன் வந்து அவளைக் கூப்பிட்டான்.

'ஓ! இந்தப் படம் இன்னும் கான்ஸல் ஆகவில்லையா ? இனிமேல் ஆகும். இன்னும் இந்த புரொட்யூஸரிடம் அவர் ஆள் அனுப்பவில்லை போலிருக்கிறது.'

இயந்திரமாய் உள்ளே நுழைந்தாள் அவள்.

எல்லாம் தயார். கதாநாயகனும் தயாராக நின்று கொண்டிருந்தார்.

'அட பாவி! நீ உண்மையிலேயே பெரிய நடிகன்தான்.... இவ்வளவும் செஞ்சுட்டு, ஒண்ணும் தெரியாதது மாதிரி நின்னுக்கிட்டிருக்கியே, பாவி.....!' அவள் கண்களில் கண்ணீர் 'நிறைந்து' வடிந்தது.

''அம்மா ! ரெடியா?.... எஸ்... லைட்ஸ் ஆன்..... ஸ்டார்ட்.....''

சுற்றிலும் பார்க்கிறாள் அவள்.

கதாநாயகன், டைரக்டர் காமிரா, விளக்குகள், ஸெட், அலங்காரம்...எல்லாம் அவளை விட்டுப் போகப் போகின்றன. எல்லாரும் அவளைக் கைவிட்டு விட்டார்கள்—அவள், இனி மேல் ஊருக்குத் திரும்பிப் போய், இட்டிலி சுட்டு, ஆப்பம் சுட்டு —

கிர்ர்ர்ர்....

நடிகை தன்னை மறந்துவிட்டாள். அதாவது — தான் நடிப்பதை மறந்துவிட்டாள் !

கண்களில் நீர் வெள்ளமெனக் கொட்ட, நெஞ்சம் குமுறிப் பொங்கிக் குலுங்க, — உதடுகள் துடித்து நடுங்க, அழுதாள் மேனகா.

''என்னங்க, இப்படி என்னைக் கைவிட்டுட்டீங்களே ? நான் என்ன தப்பு செஞ்சேன் ? உங்களையே தெய்வமாக நினைச்சுப் பூஜை பண்ணிக்கிட்டிருந்தேனே, ஏன் என்னை

இப்படி ஒதுக்கித் தள்ளிட்டீங்க?....என்னைக் கைவிட்டுடாதீங்க..... உங்க ஆதரவு இல்லேன்னு, என் எதிர்காலமே இருண்டு போயிடுமுங்க. என் வாழ்க்கையே பாழாய்ப் போயிடுமுங்க....தயவுசெஞ்சு கருணை காட்டுங்க...''

கதாநாயகனின் காலில் விழுந்து கதறினாள் நடிகை. ''கட்... கட்... ஏ ஒன்...: பிரமாதம்....'' என்று பாராட்டினார் டைரக்டர்.

'' அம்மா ! நான் எழுதியிருந்ததைவிட நீங்க பேசின வசனம் ரொம்ப அருமை'' என்றார் கதை வசனகர்த்தா.

விளக்குகள் அணைந்தன. காமிரா பின் வாங்கியது. விசிறிகள் சுழன்றன.

அவள், இன்னும் கதாநாயகனின் காலிலேயே விழுந்து அழுது கொண்டிருந்தாள்.

''தங்கச்சி ! எழுந்திரு.... அழாதேம்மா! உன்னுடைய பட ஒப்பந்தம் எதுவுமே ரத்து ஆகலே... உனக்குச் சோகமான 'மூடு' வர வைக்கிறதுக்குத்தான், நான் நாலு பேரை வெளியே அனுப்பிப் படாதிபதிகள் பேசறது மாதிரி உனக்குப் போன் பண்ணும்படி செஞ்சேன். அதன் பலனைப் பார்த்தியா ? இப்போ எவ்வளவு அருமையாய் ஆக்ட் பண்ணிட்டே !.... எதிர்காலத்திலே நீதான் டாப் ஹீரோயின்.....''

அவர் நெஜமாகவே அ.உ.ந.பூ.தான் !




## தேசியகீதப் பிரச்னை

லட்சக் கணக்கில் பணத்தை முடக்கி எடுக்கும் திரைப்படங்களில் ஏன் இறுதியில் தேசிய கீதத்தைச் சேர்க்கக் கூடாது? இறுதியில் படத்துடன் சேர்ந்தே தேசிய கீதம் வந்தால் தியேட்டர் முதலாளிகள் ஒரே பிரதியை வைத்துக் கொண்டு தேசிய கீதத்தைக் கொலை செய்வதைத் தவிர்க்கலாம்.

உடுமலை
30–10–72 வே. க. இராசரத்தினம்

## கேலிக்குக் காவல்!

பாளையங்கோட்டை கல்லூரி ஒன்றில் பேராசிரியராக வேலை பார்த்து வரும் ஒருவர் அமைதியானவர்; மாணவர்கள் அன்பைப் பெற்றவர். கடந்த 19–11–72 அன்று மாலை, அவர் வசிக்கும் தெருவோடு சென்று கொண்டிருந்த சில இளைஞர்கள் பெண்களைக் கேலி செய்தனர். அந்த இளைஞர்களைக் கூப்பிட்டு, பேராசிரியரும் அவருடைய தம்பியும் 'இவ்வாறெல்லாம் கேலி செய்யாதீர்கள்' என்று கண்டித்தனர். அந்த இளைஞர்களோ, ''சரி தான் நிறுத்தய்யா, போலீஸ் எங்கள் பக்கம் இருக்கிறது. பார் உன்னைப் படுத்துகிற பாட்டை'' என்று கூறிச் சென்றனர். இரவு ஒன்பது மணி அளவில் நான்கைந்து போலீஸார் 'மப்டி'யில் தடியெடுத்து வந்து பேராசிரியர் வீட்டுக்குள் புகுந்து அவரையும் அவரது தம்பியையும் நையப் புடைத்துவிட்டனர். பிறகு அவர்களைக் காவல் நிலையத்துக்கும் அழைத்துச் சென்றுவிட்டனர். போலீஸாரோடு பேராசிரியர் வீட்டுக்கு இரவு வந்த இளைஞர்கள் அவரைப் பெயரிட்டழைத்து, ''டேய், பார்த்தாயா, நாங்கள் சொன்னால் போலீஸ்காரர்கள் கேட்பார்கள். எங்கள் வேஷ்டியில் இருக்கும் இரு வண்ணக் கரையைப் பார்க்காமல் சாயங்காலம் பேசினாயே, இப்ப உன் வேஷ்டியெல்லாம் ரத்தக் கறை'' என்று இழிவாகப் பேசினராம்.

ஆட்சி நடத்தும் கட்சியைச் சேர்ந்தவர்கள் காவல் துறையைப் பயன்படுத்தும் விதம் எப்படி ? பொறுப்புள்ள பேராசிரியருக்கே இந்த நிலையென்றால் சாதாரண மக்கள் நிலையைப் பற்றி என்ன கூறுவது ?

திருநெல்வேலி — 1
20–11–72 நெல்லை. நில. சுந்தரம்

## காலத்தின் கோலம்

முதலமைச்சர் திரு கருணாநிதி அவர்கள் மீது மத்திய புலனாய்வுத் துறையின் அறிக்கை இருப்பதாக மக்கள் மத்தியில் சந்தேகம் தோன்றிய போது அது குறித்து ஞானாசிரியர் ராஜாஜி, ''அறிக்கையை வெளியிட வேண்டும்'' என்று எழுதினார். அப்போது தி.மு.க.வினர் மிகுந்த கோபம் கொண்டு வரம்புமீறிக் கூட ராஜாஜியைத் தாக்கிப் பேசினர். ஆனால், ''வாய்மை வெல்லும்'' என்பது தற்போது நிரூபணமாகிவிட்டது. முன்பு கருணாநிதி அவர்களின் உற்ற தோழர்களாயிருந்தவர்களே இப்போது தி. மு. க. மந்திரி சபை மீது ஊழல் புகார்களைக் கூறுவதுடன் நிற்காமல், ராஷ்டிரபதியிடமே மகஜர் ஒன்றைக் கொடுத்துள்ளனர். இந்தத் தி.மு.க. மந்திரி சபை மீது மக்கள் நம்பிக்கை இழந்துவிட்டனர் என்பதை எடுத்துக்காட்டும் பொருட்டு, ஹர்த்தாலையும் வெற்றிகரமாக நடத்திக் காட்டியுள்ளனர். காலத்தின் கோலத்தை என்னவென்று சொல்வது?

சென்னை — 84
16–11–72 ''சுதந்திர அனில்''

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031
Managing Editor: T. Sadasivam

# ANNOUNCING!

The sale of

**BLENDED AND FANCY FABRICS**

made by mixing cotton and

**GRASIM** STAPLE FIBRE

from to-day at

**AKASH-DEEP, SANDHURST BRIDGE, CHOWPATTY**

- *Attractive Fancy Dress material for ladies*
- *Immaculate Bush Shirtings for gents*
- *Decorative Tapestry and Curtain materials*
- *Priced cheaper than cotton fabrics*



**GWALIOR RAYON SILK MFG. (WVG.) CO. LTD., BIRLAGRAM, NAGDA (M.P.)**

Registered No. M. 4392
Registered as a Newspaper in Ceylon இலங்கையில் விலை 45 சதம் (தபால் செலவு தனி)











